# சமயக் கட்டுரை மாலை




பேராசிரியர். டாக்டர். வெ. சு. அழகப்பன்,
எம். ஓ. எல்., எம்லிட்., பி. எச்டி.
தமிழ்த்துறை, அழகப்பா கல்லூரி, காரைக்குடி -3.

கண்ணம்மை பதிப்பகம்
8- ப. அ. லெ. தெரு,
காரைக்குடி. - 623 001.

## Bibliographical Data:

| | |
|---|---|
| Title of the book: | Samayakkaturai Malai |
| Author: | Dr. VS. ALAGAPPAN, M. O. L. M. Litt., Ph. D.<br>Prof. of Tamil<br>Alagappa College,<br>Karaikudi-3. |
| Publisher: | Kannammai Pathippagam<br>8, P. A. L. Street,<br>Karaikudi-623 001. |
| Language: | Tamil |
| Edition: | First |
| Date of Publication: | July 1982 |
| Paper used | Sheshaseyee 11.6 Kg. |
| Size of the book | Grown 1×8 |
| Printing types used | 12 Pt. |
| Number of Copies: | 1000 |
| Number of Pages | 106 + |
| Binding: | Cardboard |
| Printer: | Thirumagal Achakham<br>Karaikudi. |
| Call No. | 031, 6 (Q2) N34, 2 N82 |
| Subject: | Literary essay on Religion |
| Price: | Rs. 8-00 |

# காணிக்கை

கருணைக்கடல் - கருவறையைத்தூர்க்கும் பெருமணல்வெளி
என்னை ஆண்டு கொண்டு நாளும் வழிநடத்தும்
திருவாளன் திருப்பெருந்திரு
சத்திய சாயி பாபாவின் பொன்னார்
தாமரைத்தாள்கட்குக்

## காணிக்கை

கண்மகிழும் குருவான கனியே! போற்றி!
கடையரையும் கைதூக்கும் கண்ணா! போற்றி
பண்மகிழும் ***சாயீசா! பாபா!*** போற்றி!
பல்சமய ஒருமைசொலும் பண்பா! போற்றி!
விண்மகிழும் பணிசெய்ய விளம்பினை போற்றி!
வியன்கல்வி நலஞ்சேர்க்கும் விகிர்தா! போற்றி!
மண்மகிழும் நோய்தீர்க்கும் மருந்தே! போற்றி!
மலரடியில் ***"இம்மாலை"*** வைத்தேன் போற்றி!



# பொருளடக்கம்

ஓம்சாய்ராம்

# முகவுரை

என்தந்தையார் திரு. சுப்பிரமணியஞ் செட்டியார் அவர்கள் பழுத்த சைவர். என் பாட்டியார் வள்ளியம்மை ஆச்சி சமைத்த பிள்ளையார் கோவிலை நிறைவு செய்து நிறைவு கொண்டவர்கள். என் அன்னையார் கண்ணம்மையார் எங்கள் ஊர் வட்டத்தைச் சார்ந்த எல்லாத் தெய்வங்கட்கும் பொன்னாலும் மணியாலும் வெள்ளியாலும் கையுறைப்பொருள்கள் அமைத்துக் காணிக்கையாக்கிய கவிச்செல்வி. என்பெற்றோர் இளமை தொட்டே எனக்குச் சமயக்கல்வி நல்கி வந்தனர். எனது எம்லிட், டாக்டர் பட்டங்கட்காக நான் தேர்ந்தெடுத்த நூல்கள், சமயச்சார்பின ஆதற்கு இதுவே காரணம். சங்க நூல்களையும் " பதினோராந்திருமுறையையும் " நுணுகிப் பயின்றகாலை, எனது சமய அறிவும் நம்பிக்கையும் ஆழமாயின. முன்னோர்கண்டவை மெய்யிலும்மெய் எனத் தெரிந்து தெளிந்தேன்.

வாழ்க்கையில் அடிபட்டு அடைவுகள் வந்தகாலை இன்பத்தில் மிதந்த நாளினும் இடரால் துவண்டும், இளைத்தும், களைத்தும், சலித்தும் - நின்றபோது இச்சமய அறிவு ஊற்றம் தந்தது. "நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே" என்றும் "பெரியோரை வியத்தலும் இலமே சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே" என்றும் முன்னோர் மொழிந்தன முன்னின்றன. ஆகவே அத்தளர்வுகள் என் உள் மனத்தை உலுக்கவுமில்லை, குலுக்கவும் இல்லை.

இப்படிப்பட்ட வேளைகளில் என்குருவாய் இறையாய் முன்னின்று வழிநடத்தி, என்னைப்புரந்து வரும் திருப்பெருந்திரு சத்திய சாயிபாபா அவர்கட்கு இந்நூலைக் காணிக்கையாக்கினேன்.

இந்நூற்கண் ஒன்பது கட்டுரைகள் உள. ஈராயிரமாண்டுப் பழமைமிக்க புறநானூற்றிலிருந்து இருகட்டுரைகள் உள. அவை அக்காலச் சமய உணர்வுகளையும் கதைகளையும் விளக்கித் தெளிவு தரும். பின்வரும் சமய உணர்வுகட்கு அங்கேயே வேரோடிக்கிடத்தலைக் காணலாம். 'பாண்டியர் வளர்த்த சைவம்' என்ற கட்டுரையில், திருமுறைகட்கும் பாண்டிப்பதிகட்கும் உள்ள தொடர்பு, பாண்டிநாட்டில் பிறந்த சைவ சமய அரிய நூல்கள், குகைக்கோயில்கள், கல்வெட்டுக்கள், இவைபற்றிய செய்திகள் ஆராயப்படும். 'சைவசமய மறுமலர்ச்சியில் நகரத்தார்' என்ற கட்டுரையில் நகரத்தார் இயற்றிய அறப்பணிகள், சமய வளர்ச்சிக்கு ஆற்றிய பிறபணிகள் விளக்கப்படும். 'மாணிக்கவாசகரின் வழி' என்ற கட்டுரையில் அவரது சமயக்கோட்பாடுகளை விளக்கி, இளைஞர்களுக்குத் தெளிவு வர வழி செய்தேன். 'நாச்சியார் பாடல்' வைணவ சமயக் கட்டுரை. இக்கட்டுரையில் நாச்சியார் வரலாறு, காலம், நூல்களும் யாப்பும், பாடுபொருள், இலக்கியப்போக்கு, கற்பனை, புராணக்கதைகள், யாவும் முழுமையாக ஆராயப் பெற்றுள்ளன. 'தேவி புகழ்' - என்ற கட்டுரையில் சத்திமதம், தலங்கள், சத்திபுகழ்பாடும் நூல்கள், சத்தியின் தலைமை, இயல்புகள் - ஆகியவை தொகுத்துரைக்கப் பெறும். 'பழநிமலைப் பயண வரலாறு' என்ற கட்டுரையில் நகரத்தார் வரலாற்றின் ஒரு பகுதி விளக்கப்பெறும். அரண்மனைப்பொங்கலார் வரலாறு முழுமையாகத் தெரிந்து வரையப்பெற்றுள்ளது. பட்டயச்

சான்றுலும் முதியோர் வாய்க்கேட்டும் செய்திகள் தரப் பெற்றுள்ளன. இக்கட்டுரையாசிரியரே பழநிப்பயணம் செய்தவராதலின் விரத முறைகளும், வழிநடையூர் நிகழ்ச்சிகளும் கண்டும் கேட்டும் துய்த்தும் எழுதப் பெற்றன. 'பாரதி காட்டும் விநாயகர்' என்ற கட்டுரையில் விநாயகரைப்பற்றியபாரதியாரின் சிந்தனைகள், தத்துவம், வேண்டுதல்கள் யாவும் விளக்கப்பெற்றுள்ளன. கால முறையில் கட்டுரைக்கோப்புச் செய்யப்பெற்றதால் விநாயகரைப் பற்றிய கட்டுரை இறுதியில் இடம் பெற்றது. இந்நூலில், விநாயகர், முருகன், சிவபிரான், திருமால், சத்தி, பிற தெய்வங்கள் பற்றிய செய்திகளை அறியலாம்.

இவ்வாய்வுக் கட்டுரைகள் வெவ்வேறு காலங்களில் வெவ்வேறு மலர்களில் இடம்பெற்றவை. இன்று ஒருசேர "சமயக்கட்டுரை மாலையாக" மலர்ந்துள்ளது. ஒவ்வொரு கட்டுரையிலும் பயில்வார் ஏதேனும் ஒரு சில புதுச்செய்திகளைப் பெறுவாராயின், அதுவே எனக்கு மன நிறைவைத் தரும்.

தமிழ் முனிவராகவும் - சமுதாய முனிவராகவும் விளங்கும் நம் தவத்திரு குன்றக்குடி அடிகளாரிடம் எங்கள் குடும்பம் பன்னெடுங்காலமாக மரியாதையும் மதிப்பும் உடையதாகும். அவர்களும் என்பால் அன்பு பாராட்டி ஆதரிக்கும் இயல்பினர். அவர்களிடம் இந்நூற்கு வாழ்த்து வேண்டினேன். மகிழ்ந்து வாழ்த்திப் பாராட்டி உள்ளார்கள். அவர்கள்தம் திருவடிகட்கு வணக்கம் செலுத்தி நன்றிபாராட்டுகிறேன்.

எனக்கு ஆசிரியராக விளங்கிய டாக்டர். தமிழண்ணல் (மதுரை காமராசர் பல்கலைக்கழகத்

தமிழ்த்துறைத்தலைவர்) - அவர்கள்பால் இதற்கோர் அணிந்துரை வேண்டினேன். அவர்கள் அணிந்துரையைப் பாராட்டுரையாகவும் வழங்கினர். "என்றுமுள தென்றமிழ் இயம்பி" இசைகாணும் அந்நல்லார்க்கு என் நெஞ்சக நன்றியும் வணக்கமும் உரிய.

இந்நூல் வெளிவர உதவிய நண்பர்கள் - அன்பர்கள் யாவர்க்கும் நன்றி. பயிலத்துடிக்கும் 'தமிழ்ப்பாச மலர்கட்கும்' நனிநன்றி.

எழிலாக அச்சிட்ட என் நண்பர் திருமகள் அச்சக உரிமையாளர் திரு. பழநியப்பன் அவர்கட்குப் பாராட்டும் நன்றியும்.

30—7—'82
காரைக்குடி

அன்பன்,
**வெ. சு. அழகப்பன்**

உ
சிவ சிவ

தவத்திரு.
குன்றக்குடி அடிகளார்

குன்றக்குடி—623 206
இராமநாதபுரம் மாவட்டம்

# வாழ்த்துரை

நமது இனிய அன்பர் டாக்டர் வெ. சு. அழகப்பன் அவர்கள் எழுதிய "சமயக் கட்டுரை மாலை" என்ற நூலைப் படிக்கும் அருமையான வாய்ப்புக் கிடைத்தது. இந்த வாய்ப்பு எவ்வளவு பயனுடையது என்பது நூல் முழுதும் படித்துணர்ந்த பிறகு புலனாயிற்று.

நூலில் சமயத் தத்துவ விளக்கக் கட்டுரைகள், திருக்கோயில் வரலாறுகள், செந்தமிழையும் சிவநெறியையும் வழிவழி வளர்த்து வரும் நகரத்தார் சிறப்பு ஆகியன எழுதப் பெற்றுள்ளன. இனிய, எளிய நடை. பொருட் செறிவுள்ள நூல். நூல் முழுதும் எடுத்துக் காட்டுக்களும் மேற் கோள்களும் நிறைந்து விளங்குவதால் எந்த ஒரு கருத்தையும் ஐயமின்றித் துணிய முடிகிறது.

தமிழில் தோன்றி வளர்ந்துள்ள இலக்கிய, இலக்கண நூல்கள், சமய நூல்கள் ஆகியன மூவாயிரம் ஆண்டுக் கால வரலாற்றுப் பழைமையுடையன. இதற்கு அப்பாலும் கால எல்லை கூறுவதும் உண்டு. ஒரு கொள்கையை அல்லது கோட்பாட்டை இதுவென நாம் துணிந்து மக்களுக்கு அறிமுகப் படுத்தும் பொழுது அண்மைக் காலத்தில் தோன்றியதாகவும் பலரால் ஏற்கப் பட்டதாகவும் உள்ள நூலையே சான்றாகக் கொள்ளுதல் நல்லது. இது காலந்தழீஇய நிலையினதாக அமைந்து மக்களுடைய வாழ்க்கைக்குத் துணை செய்யும். பக்குடுக்கை நன்கணியார் பாட்டிற்கு நூலாசிரியர்

கொண்ட பொருள் தவறில்லை, ஆயினும் அந்தப் பாட்டிற்குரிய உயிர்ப் பொருள் நிலையாமையை மட்டுமே குறிப்பதன்று. நிலையாமை வழிவந்த வெறுத்தல் கொள்கையன்று. இன்னாதனவாக இருக்கின்ற உலகியலை இனியனவாக ஆக்குதல் வேண்டும் என்ற கடமை உணர்த்தப்படுகிறது.

நகரத்தார் 'சிவமதங்களிலேயே இருக்க வேண்டும் என்ற பூங்குன்றைக் கல்வெட்டுச் செய்தி அருமையானது.

ஆசிரியர், பாரதியின் விநாயகர் நான்மணி மாலையைத் திறனாய்வு செய்து எழுதியுள்ள கட்டுரை மிகச் சிறப்பாக இருக்கிறது. கடவுள் பக்திப் பாடல்களில் நாட்டுப்பற்றை - விடுதலை வேட்கையை முதன்முதலில் இணைத்துப் பாடியவர் பாரதி. பாரதி, விநாயகரை விரும்பி வணங்கியது வீடு பேற்றிற்கன்று; வெற்றிக்காகவே! என்று ஆசிரியர் குறிப்பிட்டிருப்பது பாரதியை ஆசிரியர் ஆழ்ந்து அனுபவித்ததன் வெளிப்பாடு.

பொதுவாக நூல் சிறப்பாக அமைந்திருக்கிறது. பதினோராம் திருமுறையை ஆய்வு செய்து டாக்டர் பட்டம் பெற்றவர் பேராசிரியர் அழகப்பனார். "சிலம்பின் முதல் ஒலி" என்னும் நூல் வழி செந்தமிழ் உலகத்துக்கு அறிமுகமானவர். தமிழ்மொழி நலம், தமிழர் நலம், தமிழ் நெறி ஆகியவற்றைப் பேணுதலில் நம்முடன் தொடர்ந்து வருபவர். அவர்தம் முயற்சி வெற்றி பெற நமது வாழ்த்துக்கள்!

'சமயக் கட்டுரை மாலை'யை அனைவரும் படித்துப் பயனுற வாழ்க்கை அடையுமாறு கேட்டுக்கொள்கின்றோம்.

இன்ப அன்பு,

**அடிகளார்.**

# அணிந்துரை

" தமிழண்ணல் ",
டாக்டர். இராம. பெரியகருப்பன், எம். ஏ., பி. எச்டி.,
தமிழியல் துறைத்தலைவர்,
இந்திய மொழிப்புல இணைப்பாளர்,
மதுரை காமராசர் பல்கலைக் கழகம், மதுரை.

டாக்டர் வெ.சு. அழகப்பன் ஆற்றொழுக்காக எழுதும் ஆற்றல் பெற்றவர். புறநானூற்று ஆய்வில் எம். லிட்., பட்டமும், பதினோராம் திருமுறை ஆய்விற்காக அறிஞர் பட்டமும் பெற்றவரிவர். இவர்தம் பல்வேறு காலங்களில் எழுதிய கட்டுரைகளை நிரல்படத் தொகுத்து இந்நூலின் கண் வெளியிட்டுள்ளார். புறநானூற்றுச் சமயம், புறநானூற்றில் இதிகாச புராணங்கள் என இவர் எழுதியுள்ள இரண்டு கட்டுரைகளும் புறநானூற்று ஆய்வைச் சார்ந்தன. இவை புறநானூற்றில் வரும் பல குறிப்புக்களைத் தொகுத்து, வரன்முறைப்படுத்தி, ஆய்வு நோக்குடன்எழுதப்பட்டவையாகும். 'பாண்டியர்வளர்த்த சைவம்' என்ற கட்டுரை முற்கால பிற்கால பாண்டியர் காலத்தில் சைவ சமயம் வளர்க்கப்பட்ட விதத்தைக் கோடிட்டுக் காட்டுகின்றது. 'மாணிக்கவாசகர் வழி', 'நாச்சியார் பாடல் திறம்' 'தேவி புகழ்' ஆகிய கட்டுரைகள் பக்தி இலக்கியத்தில் குறிப்பிடத்தக்க சில சிறப்புக்களை கண்டு எடுத்துக் கூறுவனவாகும். 'சைவ சமய

மறுமலர்ச்சியில் நகரத்தார்' என்ற கட்டுரையும், 'பழனிமலைப் பயண வரலாறு' என்ற கட்டுரையும், நகரத்தார்களின் சைவ சமயத் தொடர்பையும், வள்ளன்மையையும், பத்திமையையும் விளக்குவனவாகும். 'பாரதி காட்டும் விநாயகர்' என்னும் கட்டுரை, பாரதியார் சாதாரண மக்களுக்கும் ஏற்கும் வண்ணம் தத்துவத்தையும் பத்திமையையும் எடுத்துக் கூறும் பான்மையை விளக்குகிறது.

இந்நூல், அரிய செய்திகளை எளிய நடையில் எடுத்துக்கூறி, படிப்பவரின் ஆய்வுச் சிந்தனையையும் தூண்டுவதாய் அமைந்துள்ளது. ஆசிரியர் இத்தகைய பயனுள்ள கட்டுரைகள் பல எழுதித் தமிழுக்கு வளம் சேர்க்க வேண்டும் என வாழ்த்துகிறேன்.

---



# புறநானூற்றுச் சமயம்

**முன்னுரை :**

மக்களுக்கு அச்சம் என்பது இயல்பாக உள்ள ஓர் உணர்வு. இவ்வச்சவுணர்ச்சியே சமயப் பிறப்பிற்கு மூலம் என்பர். மக்களை அச்சுறுத்தும் பாம்பு, இடி முதலியன வணங்கப்பட்ட கால நிலையே, சமயத்தின் தொடக்கம் என்பர். நாம் விரும்பி ஏற்கத்தகும் குணச்சால்பு கொண்ட வீரர், சான்றோர், பெரியோர், முதியோர் ஆகியோரை வணங்கிய நிலை, சமயத்தின் அடுத்த நிலையாகும். இதனை அடுத்து, பற்பல கடவுள்களை வழிபட்ட வளர்ச்சி தோன்றியது. இதன் பின்னர் ஒரே கடவுளை வணங்கும் சமயப் பொதுமை தோன்றியது. சங்க காலத்தில் இம் மூன்று நிலை வழிபாட்டு முறைகளும் இருந்தன. புறநானூற்றிலும் இதனைக் காணலாம்.

சங்க காலத்தில் சைவம், வைணவம் என்ற சமயப் பிரிவுகள் தனித்து இயங்கவில்லை. வேத நெறிகளைக் கூறும் வைதிக மதங்கள், பௌத்தம், சமணம் ஆகியவை தமிழகத்தே வழக்கில் இருந்தன. புறநானூற்றில் வேதங்கள் பற்றியும், வேள்வி பற்றியும் அறிகிறோம். ஆனால் பௌத்த சமண சமயங்களைப் பற்றி நேரே குறிப்புக்கள் இல்லை. புறநானூற்றுப் புலவரில் ஒருவரான உலோச்சனாரைச் சமணர் என்பர்.[1] புறநானூற்றுப் புலவர் மாங்குடி மருதனார், தமது மதுரைக் காஞ்சியில்

பௌத்தப் பள்ளி, சமணப் பள்ளி பற்றி இயம்புவதால், அம்மதங்கள் மதுரை போன்ற தலைநகரத்தில் வேரூன்றி விளங்கின என்பதாம்.[2]

புறநானூற்றில் சிவபெருமான், முருகன், திருமால், பலராமன் ஆகிய கடவுள்களைப் பற்றிய நற்குறிப்புக்கள் உண்டு. வேறு தெய்வங்கள் பற்றியும், தேவர்களைப் பற்றியும், சமய நம்பிக்கை பற்றியும், கொள்கைகளைப் பற்றியும் குறிப்புக்கள் வேண்டும் அளவு உண்டு.

நக்கீரர், கல்லாடனார், நப்பசலையார், ஊன்பொதி பசுங்குடையார், காரிக் கண்ணனார், மருத இளநாகனார், பேரி சாத்தனார், ஆவூர் மூலங்கிழார், ஔவையார் ஆகிய புகழ் வாய்ந்த புலவர்கள், மேற் கூறிய குறிப்புக்களை நமக்கு நன்னர் நவின்றுள்ளனர்.

***சிவபெருமான் :***

சிவபெருமானை "முக்கட்செல்வன்" என்று புறநானூறு குறிக்கும். சமுதாயத்தில் மேல்நிலையில் இருந்த அரசர், அந்தணர் ஆகியோர் இவரைத் தொழுதேத்தினர்.[3] எல்லாத் தெய்வத்தினும் இவரையே முதனிலைத் தெய்வமாகக் கருதுவர். நானிலத் தெய்வங்களை வகுத்துரைத்த தொல்காப்பியர் இவரைச் சுட்டாமைக்குக் காரணம், இவர் முதன்மைத் தெய்வமாக விளங்கியமையே! என்பர். இக்கடவுளின் தனிச்சிறப்பு மூன்று கண்ணுடைமையும்,[4] நீலமணி மிடறு உடைமையும் ஆகும்.[5] இச்செய்தியைக் காரிகிழார், ஔவையார் போன்ற புலவர்கள் சிறப்பித்துக் கூறி உள்ளனர்.

சிவபெருமானின் நீள்சடை பற்றியும்,[6] பிறைமுடி பற்றியும்,[7] காளைஊர்தி பற்றியும், காளைக் கொடி பற்றியும்[8] குறிப்புண்டு. புறநானூற்றுக் கடவுள் வாழ்த்துப் பாடலில் பெருந்தேவனார் மேலும் இரு செய்திகளைக் குறிக்கிறார். சிவபெருமான் நீர் நிறைந்த குண்டிகையுடன் தவக்கோலத்தில் விளங்குவது பற்றியும், உமையொருபாகனாகப் பொலிவது பற்றியும் இவர் குறிக்கிறார்.

முக்கட் செல்வன் சினம் மிக்கவன் எனவும், மழுவாயுதமுடையவன் எனவும் வேதத்தைத் தந்தவன் எனவும் புறப்பாட்டால் அறியலாம்[9] 'யசுர்' வேதமும் சிவனைச் சிறப்பித்துக் கூறுகிறது.[10]

**முருகன் :**

தமிழ் இலக்கியங்கள் அகம், புறம் என இரு திறப்படும். இவ்விருவகை நூல்களிலும் முருகனைப் பற்றிய செய்திகள் உண்டு. தொல்காப்பியரும் முருகனைப் பற்றியும், அவனுக்கு உகந்த வெறியாட்டுப் பற்றியும் கூறியுள்ளார்.[11] ஆகவே முருகன் பொது மக்களுக்குரிய பெருந்தெய்வம் எனத் தெரிய வருகிறது. முருக வழிபாடே பழந்தமிழர் வழிபாடு எனப் பேராசிரியர் கமில் சுவலபில் (Prof. Kamilzvelebil) ஆராய்ந்து வெளியிட்டுள்ளார்.[11அ] அரசர்களின் கடுஞ்சினத்தையோ அவர்பெற்ற வெற்றியையோ சுட்டும்போது அவ்வரசர்க்கு முருகனையும், முருகன் பெற்ற வெற்றியையும் உவமையாகக் கூறுவர்.[12] முருகன் என்ற சொல்லுக்கே அழகு என்பது பொருள் என்பார் திரு.வி.க.[13] "திருத்தகுசேய்" என்பதில் இப்பொருள் அமைவது காணலாம். "முருகு",

"சேயோன்" என்ற சொற்களால் இத்தெய்வத்தைப் புறநானூறு குறிக்கும். இவர் மயில் ஊர்தியும்,[14] கடம்பமாலேயும்[15] உடையவர். மலேயில் விரும்பி உறைகிறவர்.[16] இவர் திருச்செந்திலில் கடற்கரையில் கோயில் கொண்டமை பற்றி மதுரை மருதன் இளநாகனுர் சிறப்பித்துக் கூறியுள்ளார்.[17]

**திருமால்:**

திருமாலே மாயோன், நேமியோன் என்ற சொற்களால் புறநானூறு குறிக்கும். மாயோனின் கரிய திருமேனியில் தமிழர் ஈடுபட்டனர். ஆகவே பல புலவர்கள் இச்செய்தியைக் குறித்துள்ளனர்.[18] தமிழ்த் தெய்வங்கள் யாவுமே நிறப்பண்பு பற்றிப் பெயர் பெறுவதையும் இங்கு நாம் நினைத்தல் வேண்டும்.[19]

திருமால் சக்கரப் படையும், புட்கொடியும் உடையவர்.[20] திருமாலுக்கும் அரசர்க்கும் காத்தல் தொழில் பொது ஆகையால், திருமாலே அரசரோடு ஒப்பிடுவர். இதனைத் தொல்காப்பியர் "பூவை நிலே" என்பர்.[21]

**பலராமன்:**

பலராமன் வெள்ளை நிறமாதலின் இவரை 'வாலியோன்'–என்ற சொல்லால் குறிப்பர். இவர் கலப்பைப் படையும், பனைக் கொடியும் உடையவர்.[22]

**கூற்றுவன்:**

போர் முனையிலோ, பாசறையிலோ மிகுந்த சினத்துடன் காணப்படும் அரசனுக்குக் கூற்றுவனை

உவமையாகக் கூறியுள்ளனர். உருத்தோற்றக் கடுமையும், மாற்றுரைக் கொலை செய்யும் உறுதியும் பற்றி அரசனைக் கூற்றுவனோடு ஒப்பிட்டனர்.[23] கூற்றுவனை -'கூற்று', "மறலி" "காலன்" என்ற சொற்களால் புறநானூறு சுட்டுகிறது. இவனது படை, கணிச்சிப் படையெனவும் இப்படைக்கு எவரும் தப்ப முடியாது எனவும் சாற்றுவர்.[24]

**நான்முகன் :**

பக்குடுக்கை நன்கணியார் என்ற புலவர், (உலகு) 'படைத்தோன்' என்ற தொடரால் பிரமனைக் குறிக்கிறார்.[25] புறநானூறு பாடிய புலவருள் பிரமனார் என்ற ஒரு புலவர் பெயரையும் காண்கிறோம்.[26]

**இந்திரன்–தேவர் :**

தேவர் தலைவனான இந்திரனைப் பற்றியும், அவனது வச்சிரப் படை பற்றியும் முடமோசியார் குறிப்பிடுகின்றார்.[27] இவனை 'வேந்தன்' என்ற சொல்லால் தொல்காப்பியர் குறிப்பர்.[28] புறநானூற்றில் பாடிய ஓரம்போகியார் இந்திரவிழா பற்றி ஐங்குறு நூற்றில் இயம்புகிறார்.[29] சிலப்பதிகாரத்தில் இந்திரனுக்கு எடுத்த "இந்திர விழா" பற்றி விரிவாகக் காண்கிறோம்.[30]

தேவர்கள்-வானோர், அமரர், இந்திரர் என்ற சொற்களால் புறநானூற்றில் சுட்டப் பெறுவர். தேவர் என்ற சொல்லைத் தொல்காப்பியரும் கையாண்டு இருக்கிறார்.[31] தேவர் இமையா நாட்டத்தினர் எனவும்,[32] அவி உணவை விரும்புகின்றவர்கள்[33] எனவும்,

அமிழ்தத்தைப் பெற்றவர்கள் எனவும்[34] வாடாப்பூ (கற்பகத்தருவின்பூ) உடையவர் எனவும் புறநானூறு பேசுகின்றது.[35]

**பெண்பாற்தெய்வம்:**

திருமகள், காளி ஆகிய இரு பெண்பாற் தெய்வங்களைப் பற்றிப் புறநானூற்றில் அறிகிறோம். நல்ல இயல்புகளையும் பொருளையும் பெண்ணாகவே உருவகித்துக் காண்பது தமிழர் மரபு. இப்பழக்கம் கிரேக்கரிடமும் உண்டு. அவர்கள் ஆக்கம் முதலிய பண்பை "ஆப்ரோடைட்டி" (**Oprodity**) என்ற தெய்வமாக வணங்கினர். தமிழரும் வெற்றி, செல்வம், அழகு, முதலியவற்றைத் "திரு" என்ற சொல்லால் கூறித் தெய்வமாக்கினர். கருங்குழலாதனார் திருமகளை வெற்றித் தேவதை என்ற பொருளிலும்[36] வான்மீகியார்-செல்வத்தைத் "திரு" எனவும் புறநானூற்றில் கூறியுள்ளனர்.[37] மதுரைப் பேராலவாயார் காளியை, "அணங்கு" எனக் குறித்தார். அவள் காட்டில் கோயில் கொண்டது பற்றியும் தெரிவிக்கிறார்.[38] தொல்காப்பியர் காளியைக் "கொற்றவை" என்ற சொல்லால் குறிப்பர்.[39]

கற்பில் சிறந்த அரச தேவியை அருந்ததியோடு ஒப்பிட்டுக் கபிலர் பேசுகின்றார்.[40] "அருந்ததி யனைய கற்பினள்" என்றே ஐங்குறுநூறு மொழிவதும். இங்குக் கருதத் தகும்.[41]

**நடுகல் - *சிறு* தெய்வ வழிபாடு:**

பெரு வீரராக விளங்கி, வீர சொர்க்கம் எய்திய

வீரர்கட்கு, நடுகல் எடுத்து அதில் "பீடும் பெயரும்" எழுதித் தெய்வமாகப் போற்றி ஆடவரும் பெண்டிரும் வணங்கினர்.[42] சான்றோர் வடக்கிருந்து இறந்த போதும், நடுகல் பெறுவாராயினர். இவர்களையெல்லாம் தெய்வமாகக் கொண்டு வழிபட்ட செய்திகளையும் அறிகின்றோம்.

பொது மன்றத்தூணில் தெய்வம் இருத்தல்[43] மலை உச்சியில் தெய்வம் இருத்தல்.[44] ஆலமரத்தில் தெய்வம் உறைதல்.[45] என்னும் இந்நம்பிக்கை, பண்டைத் தமிழரிடையே காணப்பட்டது. இவற்றைச் சிறு தெய்வ வழிபாடாகக் கொள்ளலாம். இஃது ஆதி கால மக்களின் தெய்வ வழிபாட்டின் கூறு எனலாம்.

மேற்கண்ட தெய்வங்களுள் முக்கட் செல்வன், முருகன், திருமால், பலராமன் ஆகியோர் தனிக்கோயில் பெற்று, வழிபாடு செய்யப்பெற்றனர். கோயிலை "நகர்" என்ற சொல்லால் குறிப்பர்.

**வழிபாட்டு முறை:**

இத்தெய்வங்களை வழிபட்ட முறை பற்றியும் புறநானூற்றால் அறியலாம். பெருந்தெய்வங்களை எவ்வாறு வழிபட்டனர் என்றறிவதைவிடச் சிறு தெய்வங்களை வழிபட்ட முறைகளை நன்கு அறிகிறோம். 'நடுகல்லில் மயிற்பீலி சூட்டுதல், மலர்மாலை சூட்டுதல், நெல் முதலிய கூலப் பொருள்களை நாட்பலியாக இடுதல், கள் படைத்தல், தெய்வத்தை நீராட்டல், நெய் விளக்கிடுதல் ஆகிய வழிபாட்டு முறைகளைப் பற்றித் தெரிந்து கொள்கின்றோம். நடுகல்லை உற்றார்

உறவினரும் பொதுமக்களும் வழிபட்டனர்.[46] சிறு தெய்வங்களை இங்ஙனம் சீரிய முறையில் வழிபட்டனராயின், பெருந்தெய்வங்களை இன்னும் மேம்பட்ட நிலையில் வழிபட்டிருப்பர் என்பது உறுதி. இவ்வழிபாட்டுமுறைகளை நாம் இன்றளவும் காண்கிறோம். வழுத்தும் முறை பற்றியும், தெய்வத்திடம் வரம்கேட்கும் முறை பற்றியும் மிகவிரிவாகப் பரிபாடல் விளக்குகின்றது.[47]

**வேள்வி :**

வேதநெறி வேள்வியைப் பொதுமக்கள் இயற்றவில்லை; அரசரே செய்தனர். முதுகுடுமிப் பெருவழுதி, கரிகாற்பெருவளத்தான், தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், சோழன் நலங்கிள்ளி, அதிகமான் நெடுமானஞ்சி ஆகிய இவ்வைவரும் வேள்வி செய்ததாக அறிகிறோம்.[48] சேரவேந்தரும் இத்தகைய வேள்வி செய்தனர் என்பதைப் பதிற்றுப் பத்தால் தெரிகிறோம்.[49] ஆகவே, மூவேந்தரும் சிற்றரசர்களும் வேள்வி இயற்றினர். அரசர்களே அன்றிப் பார்ப்பாரும் தனிப்பட்ட வகையில் வேள்வி புரிந்தனர். சோணாட்டுப் பூஞ்சாற்றூர்ப் பார்ப்பான் இத்தகைய வேள்வி செய்தான் என ஆவூர் மூலங்கிழார் குறிக்கின்றார்.[50]

ஆகவே, சங்க காலத்தில் ஆரிய வழிபாட்டு முறைகள் அரசியலில் கலக்கத் தொடங்கின எனலாம். வேத நெறியையும் சங்க கால மக்கள் மாறாகக் கருதாமல் ஓரளவு ஏற்றுக் கொள்ளத் தலைப்பட்டனர். இங்கு நாம் ஒரு செய்தியைக் கருத்திற்கொள்ள வேண்டும். வடநாட்டு வேள்வியில் குதிரை, எருமை முதலிய உயிர்களைப்

பலியிட்டு அவ்வூனைத் தின்றதாக ஆரிய வேதம் கூறும். தமிழர் வேள்வியிலோ, விலங்கு முதலியன பலியிடப் பெற்று அவ்வூனைத் தின்றதாகக் குறிப்பில்லை.[51]

**தத்துவம் :**

நல்வினை, தீவினை-இவற்றின் காரணமாக விளையும் இம்மை-மறுமை, இன்பம், துன்பம்-இவற்றை முறைமை செய்து ஊட்டும் ஊழ், மற்றும் மறுபிறவி-இவை பற்றித் தமிழரிடம் தெளிவான கோட்பாடு உண்டு எனப் புறநானூற்றால் அறியலாம்.

**நல்வினை, தீவினை :**

நல்வினை தீவினை பற்றிய நம்பிக்கை, தனி மகனின் வாழ்வைத் தூய்மையாக்கி, நற்செயலைச் செய்யத் தூண்டின. நல்வினை வானுலகில் நல்லின்பத்தைத் தரும் என நம்பினர். பூங்குன்றனார்-நல்வினை, தீவினை பற்றி மனங்கொள்ளுமாறுகூறினார். "மனம்வருந்துமாறு தீதோ, உள்ளங்களிக்குமாறு நன்மையோ ஒருவருக்கு ஏற்பட்டால், அது பிறரால் வந்ததில்லை. அவரவர் முன்பு செய்த நல்வினைப் பயனாலோ தீவினைப் பயனாலோ ஆவதாம். ஆகவே நாம் துய்க்கும் எந்த ஒன்றுக்கும் நாமே பொறுப்பு" என்றார் அவர். இக்கருத்தை நரிவெரூஉத்தலையார், வேறு வகையில் கூறினார். "வாழ்க்கையின் நோக்கம் நல்லதைச் செய்வதும், நல்லதைப் பெருக்குவதுமாம். நல்லதைச் செய்யா விட்டாலும் பிறர்க்குத்தீங்கு செய்யும் பாவச் செயலை யாவது தவிர்க்க வேண்டும். இது நல்வழிப்படும் நெறி" என்றார்.[52] பெரும்புலவர் ஔவையார், "நல்வினையால் ஆட்சி செய்யும் சிறப்புக் கிடைக்கின்றது.

நல்வினையே வாழ்வில் பேரின்பங்களைச் சேர்க்கின்றது. பிறவி நோயைக் கடத்தற்கும் நல்வினையே தெப்பமாய் உதவும்", என நல்வினையின் பெரும் பயன்களை வேந்தர்க்கு எடுத்து விளக்குகின்றார்.[53] தீவினையின் தீமைகளை முதுகண்ணன் சாத்தனார் கோப்பெருஞ் சோழனுக்குக் கூறுகிறார்.[54]

**இம்மை-மறுமை :**

நல்வினையால், இந்தப் பிறப்பிலேயே இன்பம் உண்டு என்பதை ஔவையார், முதுகண்ணன் சாத்தனார் ஆகியோர் குறித்தனர். மறுபிறவி பற்றிய நம்பிக்கை தமிழரிடத்தில் பெரிதும் காணப்படுகிறது. பூதப் பாண்டியன், கோப்பெருஞ்சோழன் ஆகிய அரசர்களும் மறுமையை நம்பினர் என்பது அவர்கள் பாடிய பாட்டால் விளங்கும்.[55] பெரும் புலவர்களான கபிலர், பரணர், முடமோசியார் ஆகியோர் பாடல்களாலும் மறுபிறவியைப் பற்றித் தெரிந்து கொள்கிறோம்.[56] **ஊழ் :** ஊழ் பற்றிய கொள்கையும் தமிழரிடம் உண்டு. ஊழைப் புறநானூறு "பால்" "முறை" என்ற சொல்லால் சுட்டும். தொல்காப்பியர் "பால்வரைத் தெய்வம்" என மொழிந்தார்.[57] இதனை 'ஆகூழ்' என்றும், 'போகூழ்' என்றும் இரு வகைத்து எனத் திருக்குறள் உரையில் பரிமேலழகர் விளக்கினார்.[58] புறநானூற்றில் பூங்குன்றனார் ஊழைப் பற்றி வெகுவாக விளம்பினார். "பெரிய ஆற்றில் நீர் செல்லும் வழியில், மிதவை இழுத்துச் செல்லப்படுதல் போல ஆருயிர், ஊழ்வழியில் செல்லும்" என்றார்.[59] கபிலர், நன்னாகனார் போன்றோர், "நல்லூழால் சிறந்த நாட்டினைப் பெற முடியும்மென்று, அந்நல்லூழால்

நட்பு அழியாது காத்துக் கொள்ளவேண்டும்" எனவும் செப்பினர்.[60] இவர்கள் மொழியில் நல்லூழின் சிறப்பு வலியுறுத்தப் பெறுவதைக் கேட்கிறோம்.

**நிலையாமை உணர்வு ;**

செல்வம், செல்வாக்கு, ஆணை, மதிப்பு முதலியன ஒருவர்க்கு வாய்க்கும் போது, தீய எண்ணங்களும், சிறுமைப்படுத்தும் மனமும் முளைக்கும். அரசரைப் போன்றோர்க்கு இந்நிலை மிகுதி எனலாம். அப்பொழுது எல்லாம் புலவர்கள் நிலையாமையைப் பற்றிப் பெரிதும் பேசினர். உலகில் வேறு எவரினும் தமிழர்க்கு நிலையாமை உணர்ச்சி மிகுதி. இதனை ஓர் இலக்கிய நெறியாகவே வளர்த்துப் பல பாடல்களைப் பாடினர். இம்மரபு, சங்க காலத்திலும் இருந்தது. சங்கத்திற்கு முந்திய தொல்காப்பியரும், நிலையாமையைக் காஞ்சித் திணையில் பல துறைகளாக விரித்துரைத்தார். பத்துப் பாட்டில் மதுரைக் காஞ்சி ஏனைய நூல்களை விட மிகுதியான அடிகளை உடையது ; நிலையாமையைப் பேசுவது. உலக நிலையாமை, செல்வ நிலையாமை, இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை ஆகிய நிலையாமைகளைப் பற்றிப் புறநானூற்றில் காண்கிறோம்.

இளங்குமணனுக்கு அறிவுறை கூறிய பெருந்தலைச் சாத்தனர் "இவ்வுலகம் நிலையில்லாதது, புகழோரின் புகழே நிலை நிற்கும் ; பிற அழியும்" என்று குறித்தார். இவர் பேச்சில் உலக நிலையாமை பற்றியும், செல்வ நிலையாமை பற்றியும் வருவது காணத்தக்கது முதுகண்ணன் சாத்தனர் உலக நிலையாமைக்கு மூன்று உவமைகள் தந்து விளக்குகின்றார். "தாமரையிலை

பலவாக இருந்தும் பயன்படாமல் அழிதல் போல, இறப்போர் பலர் என்றும், பிறப்பு, இறப்பு இயல்பைத் திங்களின்வளர்ச்சி,தேய்வு இவற்றால்உணரலாம்என்றும், கூத்தர், நாடக மேடையில் பல வேடங்களில் தோன்றி மறைதல் போல, பலர் இங்குத் தோன்றி மறைவர்". என்றும் வலியுறுத்தினர்.[61] வாழ்க்கையில் உள்ள இன்ப துன்பக் காட்சிகளை ஒருங்கு திரட்டி உலக நிலையாமையைப் பக்குடுக்கை நன்கணியார் விளக்குவர். "ஒரே நேரத்தில் ஒரே ஊரில் ஓர் இல்லத்தில் சாப்பறை ஒலமிட்டது; மற்றொரு வீட்டில் மணப்பறை முழங்கிற்று. கணவனைக் கூடிய மகளிர் பூச்சூடினர். கணவனைப் பிரிந்த மகளிர் கண்ணீர் உகுத்தனர். இவ்வாறு கொடுமை உடையது இவ்வுலகம்" என்றார்.[62] உலக நிலையாமையைச் சுடுகாட்டுச் சூழலில் வைத்துக் கூறினார் தாயங் கண்ணனார்.[63] "சுடுகாடு உலக மக்கட்கெல்லாம் தானே முடிவிடமாய் விளங்கி, இறந்தவர் முதுகைக் காண்கிறது. ஆனால் சுடுகாட்டின் முதுகை, எவரும் கண்டதில்லை" என்றார். அஃதாவது சாதல் இயல்பு என்பதும், செத்தோர் புதைக்கப் படுதல் உறுதி என்பதும் கருத்து. இளமை நிலையாமையை இனிய காட்சியில் வைத்துத் தொடித்தலை விழுத்தண்டினார் கூறினார்.[64]

**துறவு :**

இவ்வாறு தமிழரிடையே நிலையாமை உணர்ச்சி அழுத்தமாக இருந்த காரணத்தால், துறவு மனப்பான்மை ஏற்பட்டது. துறவுச் செய்திகளைப் பற்றி ஓரேருழவர், வான்மீகியார், மாற்பித்தியார், தாமப்பல் கண்ணனார் ஆகியோர் கூறியுள்ளனர்.

ஓரேருழவர் "பரந்தவெளியில் நிற்கும் மான், வேட்டுவன் வசப்படாமல் தப்பி விடுதல் போல, நான் தவ வாழ்க்கையில் ஈடுபட்டு இல்லற வாழ்க்கையை விட்டுவிடத் துணிந்தேன். இல்லற வாழ்க்கைக் காலைத் தடுக்கும் விலங்காக இருக்கிறது"[65] என்றார். இங்கு ஒருவரது துறவு மனப்பான்மையையும், தவ முயற்சியையும் அறிகிறோம்.

வான்மீகியார் துறவறம், இல்லறம் இரண்டிற்கும் உள்ள ஏற்றத்தாழ்வை ஒப்பிட்டுப் பார்க்கின்றார் "அரச வாழ்வு நிலையில்லாதது. இல்லறத்தையும் துறவறத்தையும் சீர்தூக்கினால், தவ வாழ்க்கையின் முன்பு இவ்வுலகமே சிறு கடுகை ஒக்கும். தவப்புகழ் அத்துணை பெரிது. ஆகவே வீட்டை விரும்புவோர் இல்லறப் பற்றை விடுக. அங்ஙனம் விட்டோரையே இறையருட் செல்வம் நாடிச் சேரும். பற்று விடாதவரை அச்செல்வம் விட்டு விலகிவிடும்" எனத் துறவறத்தின் அருமையையும், பெருமையையும் விளக்கினார்.[66]

தொல்காப்பியர் தவசிகளைப் பற்றித் "தாபதர்" என்ற சொல்லால் குறிப்பர். புறநானூற்றிலும் தவசியர் பற்றிய குறிப்பு உண்டு.

துறவியர், நீண்ட முடியையுடையவர்கள். அருவியில் இடையறாது நீராடுபவர்கள். காட்டில் செந்தீப் பேணி வேள்விசெய்வார்கள். பூசைக்காகத் தாளிலையைக் கொய்வர். உணவு முதலியன துறந்து காற்றையே உணவாகக் கொள்வர். இத்தவ வலிமையால் கதிரவனின் கடும் வெப்பத்தைத் தாம் தாங்கிக் கொண்டு கதிரோடு,

விண்ணில் திரிந்து, உலக உயிர்களின் வெப்பத்தைத் தணிப்பர். இவர்களைப் பிற்காலத்தார் - "சித்தர்" என்றனர்.

**நம்பிக்கைகள் :**

சமயத்தோடு தொடர்புடைய சில நம்பிக்கைகளைப் பற்றியும் புறநானூற்றால் அறியலாம். பத்தி செலுத்தும் பெண்கள் மேல், முருகக்கடவுள் ஆவேசித்து வருவதாக நம்பினர்.[67] மழை வருவதற்குக் காரணம், தெய்வ அருள் என்பது மற்றுமோர் நம்பிக்கை.[68] நல்வேளையில் நிலத்து இடப்பெறும் வித்து, நல்ல இராசி காணும் என்று நம்பினர். நன்னிமித்தம் இவற்றில் நம்பிக்கை இருந்தது. அரசன் ஒருவனின் தோல்வியைத் தீக்கனவின் மூலம் ஒருவர் அறிந்தார்.[69] நற்சொல்லாகிய விரிச்சியிலும் நன்னம்பிக்கை இருந்தது. பாணர் முதலியோர் தம் இசைக் கருவியில் நிகழும் குற்றத்தை வைத்தே, தலைவன் முதலியோருக்கு நிகழ இருக்கும் கெடுதியை அறிந்தனர்.[70] இப்படிச் சில நம்பிக்கைகளைப் பற்றித் தெரிகிறோம்.

**முடிவுரை :**

சமய ஒழுகலாறு — நம்பிக்கை — மக்களின் ஒழுக்கத்தையும், வாழ்க்கைச் சீர்மையையும் முறைப் படுத்தித் தந்தது. சங்க காலத்தில் உருவ வழிபாடு வளர்ந்து, வரம்பிலிருந்தது. வேதநெறி வழிபாடும் தலை நீட்டிவிட்டது. வேதங்களில் முதன்மை பெறும் இந்திரன், வருணன் முதலியோர் சங்க காலத்தே செல்வாக்குப் பெறவில்லை. இவ்விரு தெய்வங்களும்

தமிழர்க்கு வந்தேறிய கடவுளர், என்று அறிஞர் மொழிவர். ஆரியச் சமயத்தினர்க்குச் சிவன், முருகன், கொற்றவை ஆகிய கடவுள்களைத் தமிழர் வழங்கினர் என வரலாற்று அறிஞர் கூறுவர். கொற்றவையின் ஆண்பால் வடிவமே மாயோன் என்பார் கா.சு.பிள்ளை. அரசன், பொது மக்களை இன்ன சமயத்தைத் தழுவ வேண்டும் எனப் பின்னாளில் வற்புறுத்தியது போல் அந்நாளில் வற்புறுத்தவில்லை. அவரவர் விருப்பம் போல் தெய்வங்களை வணங்கினர். ஆகவே சமய வழிபாட்டில் நல்லுரிமை இருந்தது எனத் தெரிய வரும். இடைக்காலத்தில் இருந்த சமயப் பூசல்களைப் போல், சங்க காலத்தில் சமயச் சண்டைகள் இல்லை.[71] "சடங்குகளை வளர்த்துச் சண்டைகளையும் அந்நாளில் வளர்த்துக் கொள்ளவில்லை" என டாக்டர் மு. வரதராசனார் கூறுவது மெய்யாகும்.[72] ஆகவே அன்று சமயத்துறையில் மக்கட்கு தனி உரிமை இருந்தது எனவும், சமய பொதுமை இருந்தது எனவும் தெரிகிறோம். "புறநானூற்றுச் சமயம்" எனத் தலைப்பு இருந்தாலும், இவை சங்க மக்களின் சமயக் கோட்பாடுகளே என அறிதல் வேண்டும்.

## அடிக்குறிப்புகள்

1 புறநானூறு — 1956; பாடியோர் வரலாறு — உ. வே. சா. பக்கம். 26

2 மதுரைக் காஞ்சி — அடி 461 & 467, 475 — 483.

3 புறம் — 6; 17 — 18

4 புறம் — 6, 55

5 புறம்— 91, 55, 56

6 புறம் — 166

7 புறம் — 55

8 புறம் — 56

9 புறம் — 56

10 உரைநடைக் கோவை I — பக்கம் 38.

11 பொருள் — புறம் — இ. சூ. 5
ஷ அக — இ — சூ. 5

11 எ. உலகத்தமிழ் — 1981 மதுரை காமராசர் பல்கலைக்கழகம் பக்கம் 252

12 புறம் — 14, 120, 209

13 முருகன் அல்லது அழகு — பக்கம் 5 — 7

14 புறம் — 56

15 புறம் — 23

16 புறம் — 125

17 புறம் — 55

18 புறம் — 56, 58, 174, 229

19 சிவன், மாயோன், சேயோன், வாலியோன் – இவை நிறம் குறித்த பண்புச் சொற்கள்

20 புறம் — 58, 56

21 பொருள் பு - இ - சூ - 5
ஷெ அ- இ. சூ. 5

22 புறம் 56, 58

23 புறம் 13, 19, 42

24 புறம் 42, 195

25 புறம் 194

26 புறம் 357

27 புறம் — 141

28 தொல்பொருள் அ. சூ. 5

29 ஐங்குறுநூறு. 62

30 சிலம்பு — காதை 5

31 பொருள் — செய்யுள் — சூ — 133

32 புறம் — 62

33 புறம் — 377, 62

34 புறம் — 182

35 புறம் — 62

36 புறம் — 7

37 புறம் — 358

38 புறம் — 247

39 பொருள் - பு - சூ - 4

40 புறம் — 142

41 ஐங்குறுநூறு — 442

42 புறம் — 335

43 புறம் — 52

44 புறம் — 158

45 புறம் — 199

46 புறம் — 232, 264, 329

47 பரிபாடல் 17 : 1 - 9; 5 : 76 — 80

48 புறம் 15, 224, 26, 400, 99

49 பதிற்றுப்பத்து — மூன்றும் பத்து

50 புறம் — 166

51 தமிழர் கொள்கை — பக்கம் 184. மறைமலை அடிகள்
தமிழர் சமயம் - பக்கம் 26 - கா. சு. பிள்ளை.

52 புறம் — 195

53 புறம் 367

54 புறம் 29, 214

55 புறம் — 71, 214

56 புறம் — 236, 141, 134

57 தொல் - சொல் - சூத்திரம் 58

58 திருக்குறள் — அதி 38

59 புறம் - 192

60 புறம் - 236, 176

61 புறம் - 165

62 புறம் - 194

63 புறம் - 356

64 புறம் - 243

65 புறம் - 194

66 புறம் - 358

67 புறம் - 259

68 புறம் - 143

69 புறம் - 41

70 புறம் - 260

71 i) Pallava Administration - page 170
ii) Sangam Polity page - 351

72 இளங்கோவடிகள் — பக்கம் 25 - 26 டாக்டர் மு. வ.

# புறநானூற்றில்
# இதிகாச - புராணங்கள்

புறநானூற்றில் இதிகாச-புராணக் குறிப்புக்கள் சில காணப்பெறுகின்றன. வரலாற்றுக் குறிப்புக்களோடு கற்பனையும், உயர்வு நவிற்சிகளும் கூடுதலாகச் சேரும் போது புராணங்களாகின்றன. எல்லைமீறிய கற்பனைகள் மிகுந்துவிடுமானால் அவை புராணங்களென்ப. இப்பண்பு எல்லா நாட்டு இலக்கியங்கட்கும் பொது.

புறநானூற்றில் இராமாயண மகாபாரத இதிகாசக் கதைகளும், முக்கண்ணன், முருகன், திருமால் தொடர்பான சில புராணச் செய்திகளும், சோழரின் முன்னோன் புருவின் பொருட்டு உடலரிந்து அளித்த செய்தியும், சோழன் முன்னோன் ஒருவன் தூங்கெயில் எறிந்த கதையும், சந்திர கிரணம் பற்றிய குறிப்பும், வேளிர் மரபு பற்றிய ஒரு பழங்கதையும் காணப் படுகின்றன.

இவை தவிர புறநானூற்றின் உரையாசிரியர் தமது உரையில் கீழ்வரும் நான்கு கதைகளைக் குறித்துள்ளார். 1 சோழன் ஒருவன் காற்றுச்செல்வனை ஏவல் கொண்டது. 2 மேல் உலகத்தில் இருந்து பூமிக்குக் கரும்பு வந்தது. 3 சகரர் குண கடலைத் தோண்டியது. 4 தேவர்கள்கதிரவனை மலையில் நிறுத்தியது ஆகிய கதைகளும் சுட்டப்பட்டுள்ளன.

**பாரதக் கதை :**

பாண்டவர் ஐவரும் துரியோதனன் முதலிய நூற்றுவரும் பொருது போர்க்களத்தே படுந்துணையும் உதியஞ் சேரலாதன் அவ்விருவர்களுடைய படைக்கும் பெருஞ்சோறு வழங்கினான் என்ற செய்தியை முரஞ்சியூர் முடிநாகராயர் குறிப்பிடுகிறார்.[1] முடிநாகராயர் முதற்சங்கப் புலவர்.[2] பாரதப்போர் நிகழ்ந்த காலம் கி. மு. 5000 எனவும், குறைந்த அளவாகக் கொண்டாலும் கி. மு. 3000 எனவும் கூறுவர்.[3] முடிநாகராயர் "ஐவரொடு சினைஇ" எனவும், ஈர் ஐம்பதின் மரும் எனவும் தொகைச் சொல்லாகச் சுட்டியவற்றைப் பழைய உரையாசிரியரும், மு. இராகவ ஐயங்கார் போன்ற முன்னுள் பெரும் புலவர்களும் பஞ்ச பாண்டவரையும், துரியோதனன் முதலிய நூற்றுவரையும் சுட்டுவதாகவே கருதினர்.

இந்நாளைய ஆசிரியர்கள், ஐவர், ஈரைம்பதின்மர் என்பனவற்றை வெறும் தொகைச் சொற்களாக மட்டுமே கொள்ள வேண்டுமேயன்றி பாரதக் கதையோடு தொடர்பு படுத்த வேண்டாவெனக் கூறுகின்றனர். இங்ஙனம் கூறுவதால் தனிப்பெரும் பயன் யாதுமில்லை என்பது தெளிவு.

பாரதப்போர் நிகழ்ந்த காலை உதியஞ்சேரல் இருபடைக்கும் சோறு வழங்கினானா அல்லது உதியஞ்சேரலின் முன்னோரின் சீரிய செய்கையை முடிநாகராயர் இவன்மாட்டு ஏற்றிச் சொன்னாரா என்ற கேள்வியைச் சிலர் எழுப்புவர்.[4] புறப்பாட்டு 2-இல்

ஆசிரியர் முன்னிலைப் படுத்தி விளித்து "வரையாது கொடுத்தோய்!" என இவன் செயலாகவே குறித்து உள்ளார்.[5] சங்கப் புலவர்கள் முன்னோர் செய்கையைக் குறிக்குங்காலை அதைத் தெளிவு படுத்தி 'மருக' முதலான சொற்களை ஆண்டு விளக்கியுள்ளனர்.[6] எனவே உதியஞ்சேரலே உணவிட்டவன் ஆவான் என்பர்.

இனி இக்குறிப்பையே முடிநாகராயருக்குப் பின் வந்த புலவர் மாமூலனார் வேறொரு விளக்கத்தோடு குறிக்கிறார். போரிட்டு வீர சொர்க்கம் எய்திய முன்னோர் பொருட்டு இவன் பெருஞ்சோறு வழங்கினான் என்றார் மாமூலனார்.[7] இவரது பாட்டில் பாரதப் போர்த் தொடர்பான எச்செய்தியும் குறிக்கப்படவில்லை. ஆயினும் புறத்திலும், பதிற்றுப்பத்து, சிலப்பதிகாரம் ஆகியவற்றிலும் பாரதப் போரில் சேரன் ஒருவனுக்கு இருந்த நல்லியல் தொடர்பு குறிப்பாய்க் குறிக்கப் பட்டுள்ளது.[8]

பாரதப் போரில் துறக்கம் எய்தியோருக்காகப் பெருஞ்சோற்று விழா செய்த சேர வேந்தன் ஒருவனது செயல், உதியஞ்சேரல் மாட்டு ஏற்றப்பட்டுள்ளது என்பதே பொருந்துவதாகத் தோன்றுகிறது. இக்கருத்தையே பேராசிரியர் ஔவை. துரைசாமிபிள்ளை போன்றோரும் வலியுறுத்தியுள்ளனர்.[9]

**இராமாயணக் கதை:**

ஊன்பொதி பசுங்குடையார் இராமாயணக் கதைக் குறிப்பு ஒன்றினை வழங்கியுள்ளார். அரக்கன் (இராவணன்) சீதையை வௌவிச் சென்றபோது

அவள் தன் அணிகலன்களை நிலத்தே எறிந்து, அழுதனள். நிலமிசை வீழ்ந்த அவ்வணிகலன்களைக் குரங்குகள் எடுத்து இடமாறி அணிந்து கொண்டது நகைப்பிற்கு இடமாயிற்று என்ற செய்தியை உவமையாகக் கூறியுள்ளார்.[10] எனவே செருப்பாழி எறிந்த இளஞ்சேட் சென்னி காலத்திற்கு முன்பே இராமாயணக் கதை தமிழகத்தே பயிலத் தொடங்கிற்று என்பதாம்.

இவை தவிர, சமயத் தொடர்பான சில புராணக் கதைகளும் காணப்படுகின்றன. (அ) முக்கண்ணன் திரிபுரம் எரித்தது (ஆ) நஞ்சுண்டது (இ) வேதம் தந்தது (ஈ) ஆலமர நிழலில் அமர்ந்து அறிவு தந்தது (உ) முருகன் சூரபன்மாவை வென்றது (ஊ) திருமால் சூரியனை மீட்டது முதலிய கதைகள் புறநானூற்றில் சுட்டப்பட்டுள்ளன. இவை தவிர பிற கதைகளை ஈண்டுக் காண்போம்.

### (அ) சோழன் (சிபி) புருவிற்கு உடலரிந்து அளித்தமை.

இக்கதையை நப்பசலையார், தாமப்பல் கண்ணனுர், கோவூர்கிழார் ஆகிய மூன்று புலவர்கள் கூறியுள்ளனர். கூறியுள்ள இடங்களை உற்று நோக்குதல் வேண்டும். அன்பு, அருள், அறம் ஆகியவை புறம்போதல் கூடாது என்பதை வலியுறுத்த வேண்டிய நான்கு இடங்களில் இக்கதை சுட்டப்பட்டு உள்ளது.

ஒரு புறுவைப் பருந்தொன்று கொல்ல விரட்டியது. புறு, சோழன் முன்னேன் ஒருவனிடம் தஞ்சம் புகுந்தது.

அதைக் காக்கக் கருதிய சோழன் பருந்திற்குத் தன் தசையைக் கொடுக்க விழைந்தான். ஆகவே புருவிற்கு ஈடாகத் தன்னையே உண்ணச் செய்யக் கருதித் துலாக்கோலில் ஏறினன் என்பது கதை. இதைத் தாமப்பல் கண்ணனார் விளக்கமாகக் கூறுகிறார்.[11] புருவிற்காகத் துலாக் கோலில் ஏறிய செய்தியை நப்பசலையாரும் கூறுகிறார்.[12] மற்ற இரு இடங்களில் "பறவையின் துயர் தீர்த்தோர் மருகன்" என்ற குறிப்பு மட்டுமே கிடைக்கிறது.[13] ஆனால் பாட்டில் **சிபி** என்ற பெயர் குறிக்கப்படவில்லை.

**(ஆ) தூங்கு எயில் எறிந்த கதை:**

சோழன் முன்னோன் ஒருவன் தூங்கு எயில் எறிந்து வெற்றி கண்டான் என்று நப்பசலையார் கூறுகிறார். இதற்கு உரையாசிரியர், "தேவரும் அணுக அஞ்சும் ஆகாயத்து, தூங்கு எயிலை அழித்தவன்" என்றார்.[14] வானத்தில் அசைந்து கொண்டிருந்த பகைவரது மதிலை அழித்த சோழன் என்றார் ந. மு. வேங்கடசாமி நாட்டார்.[15] இவர்கள் இங்ஙனம் பொருள் செய்யக் காரணமாக இருந்தது பழமொழி ஆகும்.[16] இச் சோழனின் பெயரைப் புறமோ, சிலம்போ தெளிவாகச் சுட்டவில்லை. "தூங்கு எயில் எறிந்த தொடித்தோட் செம்பியன்" என மணிமேகலை விளக்கிற்று[17] "இவ்வுலகில் உள்ள எவராலும் வெல்லற்கரிய அரண் உடைய பகைவன் ஒருவனைச் சோழன் வென்றான்" என்ற இச்செய்தியைச் சிறுபாணாற்றுப் படை கூறும்[18] இச்செய்தியே புறத்திலும் கூறப்பட்டது. சிலம்பிலும் ஆகாயத்து

எயிலை வென்றதாக இல்லை. பிற்கால நூல்கள் இச் சோழனின் வெற்றியை உயர்வு நவிற்சியாகக் கூறிப் பாராட்டி இருக்கின்றன.

### (இ) சந்திர கிரணம் பற்றிய கதை:

'பாம்புகள் திங்களைச் சூழ்ந்து பற்றிக் கொள்ளும் என்றும் அதனால் உலகம் ஒளியிழந்து வருந்தும் என்றும் வடமோதன்கிழார் கூறுகிறார்.[19]

### (ஈ) வேளிர் பற்றிய கதை:

'வடமுனிவர் செய்த ஓமகுண்டத்தில் தோன்றித் துவராபதி என்ற நகரை ஆண்ட நாற்பத்தொன்பது தலைமுறை தொடர்ந்த தொன்மையான குடியினரே வேளிர்' எனக் கபிலர் கூறுகிறார்.[20] இவர்கள் பழமையான குடியினர் என்பதும் தமிழகத்துக்கு வந்தேறியவராவர் என்பதும் தெளிவு. இவர்கள் கி. மு. 10-ம் நூற்றாண்டுக்கு முந்தியவர்கள் என்றும் மேல் கடலையொட்டிய வேள் புலத்தினின்று குடியேறியவர்கள் என்றும் மு. இராகவஐயங்கார் குறித்துள்ளார்.[21]

இனி உரையாசிரியர் கூறும் நான்கு கதைகள் வருமாறு.

### 1. தேவர்கள் கதிரவனை மலையில் நிறுத்தியது:

சக்கரவாளச் சக்கரவர்த்திகளாகிய விச்சாதரர் வெள்ளி மலைக்கு அப்பால் உள்ள உலகம் செல்ல இடைவெளி உண்டாக்கி அங்கே தேவர்கள் கதிரவனை

நிலைக்கச் செய்தனர் என்று உரையாசிரியர் ஒரு கதை கூறுகிறார்.

" தமிழ்நாட்டின் மேல் படையெடுத்த மோரியர் என்ற வடபுலத்தார் தேர்ப்படை மிக்கவர்கள். ஆகவே அவர்கள் மலையை வெட்டிப் பிளந்து வழியுண்டாக்கித் தமிழ் நிலத்தில் நுழைந்தனர்[22] என உரைப்பர். ஆயினும் அறிஞர்கள் இதை வரலாற்றுச் செய்தியாகவே நினைக்கின்றனர்.[23]

## 2. சோழன் காற்றுச் செல்வனை ஏவல் கொண்டது :

வெண்ணிக் குயத்தியார், கரிகாலன் பெருமையைக் குறிக்கும் போது இவன் முன்னோன் கடலில் கலம் செலுத்தினான் என்றும், அப்போது காற்றைப் பயன் படுத்தினான் என்றும் நவில்கிறார்.[24] இதற்கு உரை வகுத்த பழைய உரையாசிரியர் "சோழன் மரபில் வந்த ஒருவன் கடலில் மரக்கலம் செலுத்திப் போர் செய்த போது இடையில் காற்றின்றிப் போரிட இயலாது வருந்தினான் என்றும், அதனால் காற்றுக் கடவுளை அழைத்து ஏவல் கொண்டான் என்றும் நவில்கிறார்.[25] ஆனால் ஓர் ஆண்டில் குறிப்பிட்ட காலத்தில் கடலில் வீசும் வணிகக் காற்றின் வருகையைத் தெரிந்து கொண்டு மரக்கலம் செலுத்தும் புதுமையைச் சோழர் குலம் கண்டறிந்தது என்று அறிஞர் கருதுகின்றனர்.[26]

## 3. மேலுலகத்தில் இருந்து கரும்பு வந்தமை :

அதியமான் மரபினர் கரும்பை விண்ணுலகில் இருந்து ஈண்டுக் கொண்டு வந்தனர் என உரையாசிரியர் குறிக்கிறார்.[27]

ஔவையார் அதியமானையும், அவன் மைந்தன் பொகுட்டெழினியையும் பாராட்டிக் கூறும்போது கரும்பை இங்குக் கொணர்ந்த சிறப்புச் செய்தியைச் சுட்டுகிறார். அஃதாவது அயல்நாட்டில் இருந்து கரும்பை இம்மரபினர் இங்குக் கொணரச் செய்து பயிரிட்டனர் என்பதே கருத்து. ஆயின் உரையாசிரியர் விண்ணுலகச் செய்தியைப் பிணைக்கிறார்.

**4 சகரர் குணகடலைத் தோண்டியமை :**

முதுகுடுமிப் பெருவழுதியின் பெருமையைக் கூறப்புகும் காரிகிழார், அவன் நாட்டின் நான்கு எல்லைகளையும் குறிக்கிறார். கிழக்குத் திசை கடலால் சூழப்பட்டுத் தொட்டு நிற்கும் கரையை உடையது என்று கூறுகிறார்,[28] தொடுகடல் என்ற தொடரைக் கண்ட உரையாசிரியர் சகரரால் கடல் தோண்டப்பட்ட கதையை உட்கொண்டு உரை வகுத்தார்.

ஆகவே இதிகாசங்களும் தெய்வத் தொடர்பான புராணக் குறிப்புகளும், சோழர் பெருமை கூறும் கதைகளும், வேளிர் தொடர்பான கதைகளும், பிற கதைகளும் புறநானூற்றில் காணக்கிடக்கின்றன என்று அறிகிறோம்.

## அடிக்குறிப்புகள்

1 புறம் — 2 ''ஈரைம் பதின்மரும் பொருது களத்தொழிய
பெருஞ்சோற்று மிகுபதம் வரையாது கொடுத்தோய்''

2 களவியல் உரை — பக்கம் — 5 — 1953

3 அ) இராகவையங்கார் ஆராய்ச்சித் தொகுதி
பக்கம். 88 — 1964

ஆ) கலைக்களஞ்சியம் தொகுதி — 7 — பக்கம். 182

இ) புறநானூற்றுச் சொற்பொழிவுகள் — பக்கம் 142
டாக்டர். இராசமாணிக்கனார்

4 பண்டை நாளைச் சேரமன்னர் வரலாறு — பக்கம் — 65

5 இராகவையங்கார் ஆராய்ச்சித் தொகுதி பக்கம். 87

6 புறம் — 37, 39, 43, 46.

7 அகம் — 233

8 பதிற்றுப்பத்து. 14, 5 - 6, சிலம்பு. 29 — ஊசல்வரி.

9 சேரமன்னர் வரலாறு. பக்கம். 66

10 புறம் — 378

11 புறம் — 43

12 புறம் — 39

13 புறம் — 46

14 புறம் — 39 — ஷை உரை

15 சோழர் சரிதம். பக்கம். 34

16 பழமொழி. 49

17 மணிமேகலை — 1 — 4

18 சிறுபாண். 79 — 82

19 புறம் — 260

20 புறம் — 201

21 வேளிர் வரலாறு. பக்கம். 19 — 20

22 புறம் — 175

23 அ) ஔவை. சு. து. உரை. பக்கம். 381 — 1952

ஆ) புறநானூற்றுச் சொற்பொழிவுகள். பக்கம் 146
டாக்டர். இராசமாணிக்கனுர்

24 புறம் — 66

25 புறம். 66 — உரை. உ. வே. சா. பக்கம். 157 பதிப்பு - 5

26 புறம். ஔவை. சு. து. உரை. பக்கம். 171 - 72

27 புறம் - 99, 392.

28 புறம் - 6.

# பாண்டியர் வளர்த்த சைவம்

**முன்னுரை :**

உடல் வளர்ச்சிக்கு உணவுபோல், உள்ள வளர்ச்சிக்குச் சமயம் தேவை. இந்தியாவில் பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்பே சமயத்துறையில் முனைப்பும் முன்னேற்றமும் இயல்பாய் இருந்தன. சங்க நூல்களில் சமயக் கூறுகள் தெளிவாய்க் காணப்படுகின்றன. தமிழர் சமயம் என மொழியத் தக்க கோட்பாடுகள் நிலவின.

சேரரில் ஒருவன் இமயம் வரை சென்று தமிழரசு நிறுவித் தமிழ் வளர்த்தான்; புகழ் கொண்டான். சோழரில் ஒருவன் புதுமுறையில் அறங்கூறும் அவையம் கண்டு, தனிப்பெரும் புகழ் படைத்தான். பாண்டியரோ சங்கம் நிறுவித் தமிழ் வளர்த்து வீயாப்புகழ் கண்டனர். சேர சோழருக்கில்லாத மற்றோர் சிறப்புப் பாண்டியருக்குண்டு. மலையத்துவச பாண்டியன் மகளை மணக்கச் சிவபெருமானே மருகனாக வந்தார். முருகனே, களவியல் உரை நலங்காட்டினான். மால் மருகன், கடல் சுவற வேல்விடுத்தான். சிவன், முருகன், உமை மூவருமே பாண்டியர் குலத்தோடு கலப்புற்றனர். இவற்றைப் பல இலக்கியங்கள் பேசுகின்றன. இவை புராணச்செய்திகள் எனலாம். புராணங்களே பழமையானவைதாமே. சில உண்மைக் கூறுகள் கற்பனையோடு கலந்திருக்கும். இக்கூற்றால், பாண்டியர் சைவம் பரப்ப உளமார முந்திய உண்மை புலனாகும். இச்சிறப்பு, சேர சோழருக்கில்லையல்லவா ?

**முற்காலம் :**

சங்க காலத்தில் — நல்லுருத்திரன், இளஞ்சேய்ச் சென்னி, காரி என்ற அரசர் பெயரிலும் —உருத்திரனுர், பேராலவாயர், மதுரைக் குமரனுர் என்ற புலவர்கள் பெயரிலும் தெய்வப் பெயர்கள் சார்த்திவரக் காண்கிரேம். பாண்டியர், சிவபெருமானின் வழித் தோன்றல்கள் என்பதை மதுரைக்காஞ்சியும், பொதிய மலே ஆய், கண்ணுதலோனுக்குக் கலிங்கம் நல்கியவன் என்பதைச் சிறுபாணுற்றுப்படையும் பகரும். கபிலர், நக்கீரர் இருவரும் பாண்டிய நாட்டுப் புலவர்கள். முக்கட்செல்வனேப்பற்றி இவர்கள் முறையே குறிஞ்சி-38, புறம் 56-இல் பாடியுள்ளனர்.

**இடைக்காலம் :**

கி. பி. 3 ஆம் நூற்ருண்டு முதல் களப்பிரர் ஆட்சி இங்கு வந்துற்றது. கி. பி. 6-8இல் பாண்டியர் தம் ஆட்சியை நிலேநிறுத்தப் பாடுபட நேர்ந்தது. கி. பி. 9-10இல் இவர்கட்குப் பெரும் வீழ்ச்சியே. கி. பி. 12இல் சிலர் கை ஓங்கியது. கி. பி. 12-15 வரை பாண்டியர் ஆண்டாலும் அலாவுதீன் படைஎடுப்பால் பாண்டியர் குலம் செல்வாக்கு இழந்தது. நோயாளி போல் மூலேயில் வாழ்ந்தது. இவ்வரலாற்றுப் பின்புலத்தை நினேவிற் கொண்டால்தான் பாண்டியரின் வினேத் திட்பமும் வேகமும் விளங்கும். ஆகவே இவர்கள் சைவம் வளர்த்த காலம் கி. பி. 6 முதல் கி. பி. 15 வரையிலுள்ள காலம் என்க.

பன்னிரு திருமுறை ஆசிரியர்களுள் ஐவர் பாண்டிய நாட்டினர். மதுரை ஆலவாயர், சேரமான் பெருமாள் நாயனுருக்கு வழங்கிய பாசுரம் 11ம் திருமுறையில் முதலில் உள்ளது. மேற்கூறப்பட்ட பகுதியில் 5, 6, 7, - நூல்கள் முறையே நக்கீரர், கல்லாடர், கபிலர் செய்தவை. ஆக அப்பகுதியில் இந்நால்வரும் இயற்றிய நூல்கள் 16. எட்டாம் திருமுறை மாணிக்க வாசகர் அருளியது.

பெரியபுராணம் சைவ சமயிகளின் கருவூலம். அதில் வரும் அடியாருள் மூவர் மட்டுமே பாண்டிப் பதியினர். கூன்பாண்டியன், குலச்சிறையார், மூர்த்தி நாயனுர் ஆகியோராவர்.

மாறவர்மன் அவனி குளாமணி, கூன்பாண்டியன், நின்ற சீர் நெடுமாறன் எனப் பலபெயரால் இவன் வழங்கப்பட்டான். கி. பி. 620-645 வரை மதுரையை ஆண்டவன். முதலில் சமணனுக இருந்து சைவனுக மாறியவன். சம்பந்தர் அருளால் சைவம் புகுந்தவன். இச் செயற்குக் குலச்சிறையாராகிய இவன் அமைச்சரும், மனைவி சோழர்குல நங்கை மங்கையர்க்கரசியும் பெருங்காரணமாவர். இதனைத்தேவாரம், பெரியபுராணம் ஆகியவை பரக்கப் பேசும். இந்நிகழ்ச்சியால் தேவாரத்தில் "திருநீற்றுப்பதிகம்" என்ற அரிய பகுதி கிடைத்தது. மதுரையைப் பற்றித் திருஞான சம்பந்தர் 99 பாடல்களும் அப்பர் 21 பாடல்களும் ஆக 120 பாடல்கள் பாடினர்,

பெரிய புராணத்தில் இடம் பெறும் மூன்றுமவர், மூர்த்தி நாயனுர். வணிகராகிய இவர், நாள்தவருமல்

சிவ பூசைக்குச் சந்தனம் வழங்கிவந்தவர். சமணர் சூழ்ச்சியால் சந்தனம் கிடைப்பதில் முட்டுப்பாடு வந்தபோது தமது முழங்கையையே சந்தனமாக வைத்துச் சிவப்பற்றின் உறுதியால் கல்லில் இட்டுத் தேய்த்தவர். இவர் பக்தியின் உறைப்பைச் சேக்கிழார் "தத்தம் பெருமைக்கு அளவாகிய சார்பில் நிற்கும் எந்தம் பெருமக் களையாவர் தடுக்க வல்லார்" என்று பாராட்டினர். மூர்த்தியார் அரசேற்க இசைந்ததை விளக்குங்கால் "வையம் முறைசெய் குவனுகில் வயங்கிய நீறே செய்யும் அபிடேகமுமாகச் செழுங்கலன்கள் ஐயன் அடையாளமுமாக அணிந்து தாங்கும் மொய்புன் சடைமா முடியே முடியாக" இருக்க ஒருப்பட்டார் என்று கூறி மகிழ்ந்தார். இதனுல் மதுரையில் சமணம் பரவியிருந்தமையும் அதனை நீக்க மூர்த்தியார் திருமுறையாணையால் இசைந்தார் என்பதும் விளங்கும்.

**பதிகள் :**

மதுரையைப் பற்றிப் பேசும் போது மதுரை நக்கீரர் நினைவில் வருதல் இயல்பே. இவர், திருமுருகாற்றுப் படையின் ஆசிரியர். இதில் வரும் திருப்பரங்குன்றம், திருச்சீரலைவாய், (திருச்செந்தூர்) திருவாவினங்குடி (பழனி) திருவேரகம் (மலைநாட்டுப்பதி) குன்றுதோருடல் பழமுதிர்சோலை (அழகர்மலை) இவை பாண்டிப்பதிகளே. திருவேரகம் மட்டும் பிறநாட்டுப்பதி. இவற்றின் சிறப்புக்களைத் திருமுருகாற்றுப்படையில் காணலாம்.

மதுரையில்தான் 64 திருவிளையாடல்களைச் சிவபெருமான் நிகழ்த்தினுர். இதனைப் பாண்டி நாட்டுச் செல்லிநகர் பெரும்பற்றப்புலியூர் நம்பி திருவிளையாடல் கூறும். இந்நூல் காலத்தால் பிந்தியது.

தேவார ஆசிரியர்கள் சோழநாட்டுப் பதிகளையே பெரும்பாலும் பாடியுள்ளனர். ஆயினும் தேவாரத்தில் 14 திருப்பதிகள் பாண்டியநாட்டில் உள்ளவை. இப்பதிகள் பற்றி 34 பதிகங்கள் தேவாரத்தில் உள. இவற்றில் திருஞானசம்பந்தர் மட்டும் 24 பதிகங்களும், சுந்தரர் 5 பதிகங்களும் அப்பர் 5 பதிகங்களும் ஆக 340 பாடல்கள் பாடினர். அத்தலங்கள் வருமாறு: (1) திருஆலவாய் (2) திருவாப்பனூர் (3) திருப்பரங்குன்றம் (4) திருவேடகம் (5) கொடுங்குன்றம் (6) திருப்புத்தூர் (7) திருப்புனவாயில் (8) இராமேச்சுரம் (9) திருவாடானை (10) திருக்கானப்பேர் (11) திருப்பூவணம் (12) திருச்சுழியல் (13) திருக்குற்ருலம் (14) திருநெல்வேலி ஆகியவையாம்.

இவற்றில், திருப்பூவணத்தை மட்டும் சமய குரவர் நால்வருமே பாடியுள்ளனர். மதுரையைப் பற்றிச் சுந்தரர் பாடிய பாடல் கிடைக்கவில்லை என்றே தோன்றுகிறது. மேற்கண்ட பதிகளில் சிலவற்றில் நிகழ்ந்த அற்புதங்களைப் பற்றி அறிதல் நன்ரும்.

**திருப்பரங்குன்றம் :**

இது முருகன் சூரபன்மாவை வென்றபின் தங்கிய இடம். கி. பி. 7 இல் சம்பந்தர் இதனைப் பாடியுள்ளார். இவ்வூர் சமணர் பள்ளியாகவும் இருந்தது. பாண்டியர் முயற்சியால் குடைவரைக் கோயிலாயிற்று. இன்றும் சைவசமயத் தெய்வங்களைக் காணலாம்.

**திருவேடகம் :**

சம்பந்தர், சமணரோடு புனல் வாதம் செய்த போது, அவரது பாடல் கொண்ட ஏடு, நீரை எதிர்த்துக் கரையேறிய இடமாதலின் இப்பெயர் பெற்றது. இவ்வூர்க் கோவிலில் பல்வேறு கால அரசர்களின் கல்வெட்டுக்கள் உண்டு.

**திருப்புத்தூர் :**

இறைவன், தருமிக்குப் பொற்கிழி வழங்கிய பதி. சம்பந்தர், அப்பர் பாடிய தலம். பிற்காலத்தே சம்பந்தர் மடம், திருத்தொண்டர் தொகை மடம் ஆகியவை இங்கு நிறுவப்பட்டிருந்தன. இவ்வூர்க் கோவிலிலும் பல கல்வெட்டுக்கள் உள. இவ்வூர்ச் சுவாமியைப்பற்றி ஓங்குகோயிற் புராணம் என ஒன்றை கி. பி. 15 இல் திருவம்பலமுடைய மறைஞான சம்பந்தர் செய்தார்.

**இராமேச்சுரம் :**

பிரமகத்தி தோடம் நீங்க இராமரே சிவலிங்கத்தைப் பூசித்த திருப்பதி. சீதை, சிவலிங்கம் அமைத்துக் கொடுத்தார். எனவே, சிவபெருமானின் பெருமையும் முதன்மையும் அறியப்பெறும். திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் இருவரும் இத்தலத்தைப் பாடினர். அப்பாடல்களில் இவ்வரலாறுகளும் சுட்டப்பட்டன.

**திருப்பூவணம் :**

இது, சமயகுரவர் நால்வராலும் பாடப் பெற்ற பதி. பொன்னனையாள் என்ற பரத்தையின் பத்தி

மேம்பாட்டைக் கண்டு, இறைவனே சித்தராக வந்து இறைப்படிமம் செய்யச் செம்பைப் பொன்னாக்கி அருளினார். இதனால் சமயம் எளிமைப்படுத்தப்பட்டமை அறியலாம். ஆதலின் செய்தொழிலில் கருத்தில்லை - இறைப்பற்றே - நம்பிக்கையே - இன்றியமையாதது என அறியலாம். பரத்தைக்கும் அருளிய எளிமையைப் புத்தர், ஏசு வரலாற்றிலும் காணலாம்.

**திருவாசகம் :**

மேலே தேவாரத்தில் பாண்டி நாடு பற்றிக் கண்டோம். இனி, சமய குரவர் நால்வரில் பாண்டி நாட்டில் திருவாதவூரில் பிறந்த மாணிக்கவாசகர் பற்றிச் சிறிது சிந்திப்போம். இவர் முதலாம் வரகுண பாண்டியன் காலத்தவர். அவன் கி. பி. 792 — 835 வரை மதுரையை ஆண்டவன். இவர், அவ்வரசனுக்கு அமைச்சராக இருந்தார். அரசன் குதிரை வாங்க வழங்கிய பொருளைத் ‘திருப்பெருந்துறை’ என்ற ஆவுடையார் கோவிலைக் கட்டப் பயன்படுத்தினார். தம்மை மறந்த தொண்டராக - அரச தண்டனையையும் பொருட்படுத்தாத் தூய பத்தராக விளங்கினார். ஆவுடையார் கோயில் கற்கொடுங்கை - சிற்பிகட்கு ஓர் அறைகூவல் என்று கூறுப. அத்துணை தனிச் சிறப்பும் சீர்மையும் மேன்மையும் மிக்கது.

அடிகள் திருவாசகத்தோடு திருக்கோவையாரும் அருளினர். களவியல் ஒழுக்கத்தைத் தெய்வத் தொனிப் பொருளோடு இணைத்தமை இலக்கியத்துறையில் ஒரு புது முயற்சி. இதனை அடிகளே முதலில் செய்தனர். திருவாசகத்தையும் திருக்கோவையாரையும்

தில்லையம்பலவர் தமது திருக்கரத்தால் எழுதினர் எனின், மணிவாசகர் சைவத்திற்கும் தமிழுக்கும் செய்த தொண்டு அளப்பரிதன்ரோ? மற்றும் திருவாசகத்தில் 51 தலைப்புகளில் 21 தலைப்புக்கள் திருப்பெருந்துறையோடு தொடர்புடையன. அவர் அருளிய 656 பாடல்களில் 338 பாடல்கள் பாண்டி நாட்டுப் பதிகளில் பாடியவை. ஆகவே திருவாசகத்தில் பாதிக்கு மேல் பாண்டி நாட்டுக்குரியவை எனலாம்.

**கல்லாடம் :**

கி. பி. 13 ஆம் நூற்ருண்டில் வாழ்ந்த கல்லாடர் செய்த நூல் கல்லாடம். இவ்வாசிரியரும் மதுரையம்பதியாரே. மதுரையில் இறைவன் நிகழ்த்திய பல திருவிளையாடல்கள் இந்நூலில் இடம் பெற்றுள்ளன. "கல்லாடம் கற்றவனேடு சொல்லாடாதே" என்ற பழமொழியால் இந்நூலின் மொழி வளம் தெரிய வரும். இந்நூலில், உக்கிர பாண்டியன் கடலின்மேல் வேல் விட்டது, சிவபெருமான் கருங்குருவிக்கு அருள் செய்தது, கல்லானைக்குக் கரும்பு அருத்தியது, காமனை எரித்தது, சேரனுக்குத் திருமுகம் கொடுத்தது, தருமிக்குப் பொற்கிழி வழங்கியது, நரி பரியாகியது, பிட்டுக்கு மண் சுமந்தது, மாமனாக வந்து வழக்குரைத்தது, வலைவீசியது, வளையல் விற்றது, குண்டோதரனுக்காக வையை நதி பெருகச் செய்தது, ஆகிய திருவிளையாடல்கள் பற்றிய செய்திகள் பேசப்படுகின்றன. திருக்கோவையாரின் 100 துறைகட்கு விளக்கமாக ஆசிரியப்பாவால் சங்க நூல் நடையில் இந்நூல் யாக்கப்பட்டது. இந்நூலும் சமய உணர்ச்சியை வளர்க்க உதவியது.

**குகைக் கோயில்களும் கல்வெட்டுக்களும்:**

மாறன் சேந்தன், மாறன் சடையன் ஆகியோர் குடைவரைக் கோயில்களைச் செய்வதில் ஆர்வம் காட்டினர். குகைக்கோயில்களில் கணபதி, முருகன், சிவன், பார்வதி ஆகிய படிவங்களைச் சமைப்பதில் இவர்களே முன்னணியில் நின்றனர். சமணரைப் போல் குடைத்தளிகளைப் பாண்டியரே நிறுவினர். திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், கழுகுமலை, குன்றக்குடி, பிள்ளையார்பட்டி, பிரான்மலை, திருக்காளக்குடி, முதலிய ஊர்களில் இத்தகு தளிகளை இன்றும் நாம் காணலாம்.

பாண்டிய தேவிமார், பலரும் சிவபக்தைகளாக விளங்கியமையைக் கல்வெட்டுக்களால் அறியலாம். இவர்கள் தெய்வத்திருமேனிகள் செய்தமை, வழிபாட்டுப் பொருள்கள் வழங்கியமை, விசேட பூசைகள் புரிந்தமை, திருநாட்செலவு வழங்கியமை ஆகிய செய்திகளைக் கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன.

கி. பி. 13 ஆம் நூற்றுண்டில் ஆண்ட முதல்சடையவர்ம பாண்டியனைப் பற்றிக் கல்வெட்டால் அறியலாம். இவன் தில்லைநாயகர் திருக்கோவிலுக்குப் பொன் வேய்ந்தான். தில்லையில் மேலைவாசல் கோபுரம் நிறுவினுன். சோழரை வென்று அவ்விடம்வரை சென்று அங்கும் சைவப்பணி புரிந்தான்.

கி. பி. 15 ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த அரிகேசரி பராக்கிரம பாண்டியன், சிறந்த சிவ பத்தன். இவனே தென்காசி நகரை அமைத்தவன். தென்காசிக்கோவில்

சுவரை அமைத்து, திருமுழுக்காட்டு நிகழ்வித்தான். 13 மாதத்தில் இப்பணிகளை முடித்தான். கோவில் நடைமுறை இடையருமல் நடக்க ஏற்பாடு செய்தான் இத்தர்மத்தைப் பின் சந்ததியினரும் காக்க வேண்டும் என வேண்டுகோள் விடுத்த செய்தியும் கல்வெட்டில் காணப்படுகிறது.

மேலும் இவ்வரசன், திருப்புடை மருதூர்க் கோயில் மண்டபம் எடுத்தான். திருநெல்வேலி சிவபெருமானுக்கு அர்த்த மண்டபமும், பூசைக்குப் பொற்கலமும் செய்தான். குற்ருல இறைவனுக்கு மண்டபம் எடுத்தான் இச்செய்திகள் தென்காசிக் கோவில் சுவரில் உள்ள கல்வெட்டால் தெரிகின்றன.

பாண்டி நாட்டுக் கோபுரங்கள் மிக உயரமானவை. சுதை வேலைப்பாடுகள் நிரம்பித்ததும்பும். இவை கி. பி. 12 ஆம் நூற்ருண்டுக்குப்பிந்தியவை. பிற்காலப் பாண்டியரின் நாணயத்தில் 'நந்தி' உருவம் காணப்படுகிறது. சிவன் ஊர்தி நந்தியன்ருே?

**கடைக்காலம்:**

கி. பி. 1564 — 1604 இல் ஆண்ட அதிவீர ராம பாண்டியன் நல்ல சைவன். இவனும் தென்காசியில் 'குலசேகரமுடையார்' என்ற கோவில் எடுப்பித்தான். தமிழிலும் வடமொழியிலும் புலமை மிக்கவன். நைடதம் இயற்றியதோடு, கூர்ம புராணம், காசிக்காண்டம், இலிங்க புராணம், ஆகிய சமய நூல்களையும் செய்தான். இவன் தம்பி வரதுங்க பாண்டியன் சைவ சமய வளர்ச்சியில் ஆர்வலனுக விளங்கினுன். பிரமோத்தர

காண்டம், கருவைக்கலித்துறை அந்தாதி, கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி, கருவை வெண்பா அந்தாதி ஆகிய சமய நூல்களை இயற்றினன். கருவைப் பதிற்றுப்பத்தந்தாதி "குட்டித்திருவாசகம்" எனப் போற்றப்பட்டது.

**முடிவுரை :**

கி. பி. 6 முதல் கி. பி. 15 வரை 1000 ஆண்டுகள் வரலாற்றில் ஒரு நல்லகாலமே. ஆயின் பாண்டியர்கள் இக்காலத்தில் சிறந்த செல்வாக்கில் இல்லை. ஓராயிரம் ஆண்டுக்கொரு முறையே வரலாற்றில் மிக நல்ல திருப்பம் நிகழமுடியும். இக்காலம் சமண - பௌத்த மதங்களைப் புறமுதுகிட்டு ஓட்டுவதில் தமிழ் அரசரும் புலவர்களும் மக்களும் ஈடுபட நேர்ந்தது. இந்தப் பணியின் ஊற்றத்தால்தான் சைவத்தில் அகப்புறச் சமயங்கள், வைணவப் பிரிவு, பிற பிரிவுகள் ஏற்பட்டன. பல தல புராணங்கள் பின்னர் பெருகின. பல சாத்திர நூல்கள் - தோத்திர நூல்கள் எழுந்தன முன்னும் பின்னும் சைவ சமயம் வேரூன்ற இந்தக்காலம் பாதை அமைத்துப் பண்படுத்திக் கொடுத்தது என அறிதல் வேண்டும்.

இதுகாறும், சைவம் வளர்த்த 6 அரசர்கள், 10 பாண்டி நாட்டுச் சைவப் புலவர்கள், அவர்கள் இயற்றிய 28 நூல்கள் பற்றிச் சுருக்கமாகப் பல கண்ணோட்டத்தில் கண்டோம்.

# சைவ சமய மறுமலர்ச்சியில் நகரத்தார்

**முன்னுரை :**

திரைகடல் ஓடித் திரண்ட பொருள் சேர்த்துச் செட்டாக வாழும் இயல்பினர் நகரத்தார்கள். ஈட்டிய பொருளை எண்ணிச் செலவிட்டுக் காப்பதிலே கருத்தாய் இருந்தாலும், சைவ சமய வளர்ச்சிக்காகச் சுமார் நூறு கோடிவரை செலவிட்டுள்ளனர். கட்டடப் பொருளும் கூலி வகையருவும் குறைவாக இருந்த அந்தக்காலத்தில் இத்துணை கோடி கோவிற்றிருப்பணிக்காகவும் அறத்திற் காகவும் செலவிட்டுள்ளனர் எனில், அவற்றின் மதிப்பு இன்றைய அளவில் பன்மடங்காகும் என்பதாம். நகரத்தார்கள் இயற்றியுள்ள சமயப் பணியைச் சுட்டிக் காட்டுவது இவண் நோக்கம்.

**இறைப்பற்றும் அறப்பற்றும் :**

**சங்க காலம் :**

சங்ககாலம் தொட்டே இவர்கள் அறவுணர்வினராய் வாழ்ந்தனர். தேவரைப் பூசித்தும், வேள்வி செய்தும், ஆவும் ஏறும் போற்றியும் வந்தனர்.[1] "அறநெறி பிழையாது அறம் புரிந்தனர்.[2] இவ்வணிகரின் அற மனத்தையும் ஈகைத்திறத்தையும் இடைக்காலத்தில் வாழ்ந்த சேக்கிழாரும் பாராட்டி இயம்புகிறார்.[3] இவ்வியல்புகள் இன்றளவும் தொடர்ந்து வருவதைக் காணலாம்.

**இடைக்காலம்:**

வணிகராய் இருந்து துறவியான பட்டினத்தாரின் சைவப்பணியும், தமிழ்ப் பணியும் அளப்பரிதாகும். மாதொருபாகனிடம் மட்டில்லாத அன்பு வைத்ததின் காரணமாக ஐந்து தனவணிகர், அறுபத்துமூன்று நாயன்மார்கள் பட்டியலில் இடம் பெற்றுள்ளனர். இங்ஙனம் ஆறுமுகநாவலர் விளக்குவர்.[4] இப்பட்டியலில் பெண்டிரும் இடம் பெற்றிருப்பதைக் காணலாம். இவ்வாறு ஆடவரொடு மகளிரும் சரி நிகராய் நின்று "சைவம்" வளர்த்தனர்.

**அண்மைக்காலம்:**

மேலே கண்ட நெறிகளைப் போற்றிய செய்திகளைப் பூங்கொன்றைக் கல்வெட்டிலும், துளாவூர்ச் செப்பேட்டிலும் காணலாம். "சிவ மதங்களிலேயே இருக்கிறது. அந்நிய மதங்களில் சேரக்கூடாது." என்பது அவற்றில் காணப்படும் விதியாகும். இதனுல் நகரத்தாரின் அழுத்தமான சைவப்பற்றை அறியலாம். சைவ உலகம் உச்சிமேல் வைத்து உவந்து பாராட்டும் சைவப் பெரியார் சொக்கலிங்க ஐயா இதனைக் கூறியுள்ளார்.[5]

நகரத்தாரின் சைவப்பற்றை ஒவ்வொரு காரியத்திலும் காணலாம். எந்த விசேடத்திலும் திருநீற்றை முன்னர் வைத்துத்தான் எச்செயலையும் இவர்கள் தொடங்குவர். கோவில் வாசலில்தான் சாதி நியாயம் பேசுவர். இது "நகரக் கூட்டம்" எனப்பெறும். மலேயா போன்ற அயல்நாடுகளில் கோவில்

முன்பு கூடும் நகரக்கூட்டம் செய்கிற முடிவும், நன்கொடையும் மாறிலா விதிகளாக விளங்கக்காணலாம்.

"கோயில்களுக்கும் குருநிலையங்களுக்கும் உள்ள கிராமம் முதலியவற்றை நகரத்தார் விசாரணையில் வைத்துக்கொண்டு அவற்றால் வரும் ஊதியத்தை அந்தந்தத் தருமங்களுக்கே உபயோகப்படுத்துகிறது" என்பது கல்வெட்டில் காணப்படும் மற்றொரு செய்தியாகும். இதனால் இவர்கள், அறம் தடையின்றி என்றும் நடக்க மூலதனம் வைக்கும் பழக்கத்தினர் என்பதும், அதனை அவர்களே சோர்வின்றி நடத்தும் உளத்தினர் என்பதும் அறியப்பெறும்.

கொள்வினை கொடுப்பினைக்காகப் பிறசாதியார் கோத்திரமாகப் பிரிந்திருப்பது போல, இவர்களிடையே கோத்திர வகுப்பு என்பது கோவில் அடிப்படையில் பிரிக்கப்பட்டுள்ளது, இவர்தம் சமயப்பற்றைக் காட்டும் இன்றும் களாமடம், பாதரக்குடி மடம், துளாவூர் மடம் ஆகியவை நிறுவி, ஆண்களும் பெண்களும் தனித்தனி மடங்களில் "சமய தீட்சை" பெற்று வருகின்றனர். இதனைத் தனி விழாவாக நடத்துதலும் உண்டு. இத்தீட்சை பெறும் மடங்கள் தவிர, திருவண்ணாமலை ஓயாமடம், குன்றக்குடி சிவா மடம், பழநி அன்னதான மடம் ஆகியவை நிறுவிப் பசிப்பிணி போக்கியுள்ளனர். இவையே, பிற பன்னூறு மடங்கள் தோன்ற மூலமாயின. சிதம்பரம், காவிரிப்பூம்பட்டினம், கோவிலூர் முதலிய இடங்களில் மிகப்பெரிய மடங்கள் பணியாற்றி வருகின்றன. கோவிலூர் மடத்தின் தலைமைப் பீடம்,

நகரத்தார் துறவிகளுக்கே உரியது! துறவியர் இயற்றும் தொண்டு, சிறந்ததெனக் கருதினர் போலும்.

**இயற்றிய அறப்பணிகள்:**

சோழர்கள் காலத்துக் கல்வெட்டுக்களில் என்னென்ன அறங்கள் காணப்படுகின்றனவோ, அவற்றையெல்லாம் பிற்காலத்தில் அவ்வண்ணமே செய்த பெருமை, நகரத்தாருக்கு உண்டு. இச்செய்தியினை, "சைவ சமயத்தைப் பற்றிய வரையில் செட்டிநாடு இல்லை என்றால் பிற்காலத்தில் சைவசமயம் சிறந்திராது" என்று மகாவித்துவான் சைவ சித்தாந்தப் புலவர் தருமபுர ஆதீன வித்துவான் திரு. ச. தண்டபாணி தேசிகர் அவர்கள் கூறுவதால் உணரலாம்.[6]

கல்வெட்டுக்களில் நாள்நியமங்கள் பற்றியும், திருவிழாக்களைப் பற்றியுமே குறிப்புண்டு. குடமுழுக்கு, திருக்குளப்பணி இவற்றை அரசரோ குறுநில மன்னரோ செய்தனர். தனிநபர் செய்யவில்லை. ஆனால் இத்தகைய பணிகளை நகரத்தாரில் தனியொருவர் செய்ததுண்டு. நகரத்தார்கள் செய்திருக்கும் பணிகளாவன:

1 கோயில் திருப்பணி, பழுதுபார்த்தல், குடமுழுக்குச் செய்தல்.

2 தேவாரம், திருவாசகம் ஓதுவித்தல், அதற்காக மடங்கள் கட்டுதல், அவற்றைக் கருங்கல்லில் பொறித்தல்.

3 தலங்கள் தோறும் தங்கும் விடுதிகள் ஏற்படுத்துதல்.

4 பசுமடம் கட்டுதல்

5 அன்னதான மடங்கள் அமைத்தல்

6 குளம் வெட்டுதல்

7 தண்ணீர்ப்பந்தல் அமைத்தல்

8 பூசைமலருக்காகப் பூங்காவனம் ஏற்படுத்தல்

9 திருவிழாக்கள் நடத்துதல்

10 விளக்கேற்றுவித்தல்

11 நாள்நியமனங்களுக்குக் கட்டளை நியமித்தல்

12 பெரியபுராணம், கந்தபுராணம் ஆகியவற்றைச் சொற்பொழிவாகவோ, கதாகாலட்சேபமாகவோ நிகழ்வித்தல்.

13 சமய அறிவு - சாத்திர அறிவு பெருக மடங்கள் அமைத்தல்

14 பூசைப் பொருள்களை நன்கொடையாய் வழங்குதல்

15 சமய நூல்களை அச்சிட்டு விலையின்றி (இலவசமாக) வழங்கல்.

16 சமய ஆச்சாரியர்கட்குக் குருபூசைகள் நடத்துதல்.

இத்தகு தொண்டுகளை இன்றும் தொடர்ந்து செய்து வருகின்றனர். மேலும், பாடல்பெற்ற தலங்களில் அந்தணருக்கு விடுதிகள், தெய்வங்கட்கு வெள்ளி, தங்க ஊர்திகள், சாமிகளுக்குப் பொன், மணிகளால் அங்கிகள் திரு அணிகள் ஆகியவற்றை ஆக்கி அளித்துள்ளனர்.

தேவாரத் திருவாசகப் புகழ் பெற்ற பல தலங்களிலும் நகரத்தாரின் திருப்பணியை இன்றும் காணலாம். பாண்டிப்பதி பதினுன்கும், மற்ற தலங்கள் பலவும் இவர்களால் வளம் பெற்றுள்ளன.[7] கோயில் என்று சிறப்புப்பெற்ற தில்லையில் பல அறங்கள் இவர்கள் இயற்றியவை.[8] இம் மரபினரின் கோயிற் திருப்பணி குறித்துச் சைவமணி இராய. சொக்கலிங்கனுர் எழுதிய "திருத்தலப்பயணம்" என்ற நூலையுங் காண்க.[9] "கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்ற மொழிப்படி, இவர்கள் வாழ்கிற இன்று நிலவும் 78 வட்டகையிலும் அருமையான அழகுதவழும் நகரச் சிவன் கோவில்கள் எழுப்பப் பெற்றுள்ளன. இதற்கு எல்லா நகரத்தாரும் தப்பாது புள்ளி வரி கொடுத்தல் வேண்டும். இவை தவிர சிறு தெய்வங்களுக்கும் கோயில்கள் கட்டியுள்ளனர். இக்கோயில் விழாக்களில் பல மண்டகப்படிக் கட்டளையும் ஏற்படுத்தியுள்ளனர். வெளியூரில் தங்கியிருக்கும் நகரத்தார், தமது ஊர்த்திருவிழாவாம் "செவ்வாய்க்குச்" சொந்தவூர் திரும்ப வேண்டும். விழாவில் கலந்து கொள்ளுதல் வேண்டும் என்ற மரபு உண்டு. சுருங்கச் சொன்னுல் தமிழ்நாட்டில் காணப்படும் கோவிலிலும், அவற்றின் தொடர்பான பிறவற்றிலும், நகரத்தாருக்கு எவ்விதத்திலேனும் ஆக்கிய தொடர்போ பெருக்கிய தொல்புகழோ அமைந்திருக்கும்.

வடநாட்டிலும் அயல் நாட்டிலும் ஆற்றியிருக்கும் அரும்பணிகள் தனிக்கட்டுரைக்கு உரியவை ஆகையால் விரிக்காது. விடுத்தேன்.

அயல்நாடுகளில் பெருஞ்செலவில் கோவில்கள் நிறுவியதோடு, அவற்றிற்கு நிலையான மூலதனமும் சாமிகளுக்கு ஊர்திகளும் வழங்கி, திருவிழாக்களும் எடுத்து வருகின்றனர். மலேயாவில் "தைப்பூசம்" இலங்கையில் "ஆடிவேல்" இவர்களால் எவரும் போற்றும் வகையில் கொண்டாடப்படுகின்றன. இந்நாட்களில் அங்கெல்லாம் வங்கி விடுமுறை உண்டு. வெள்ளைக்கார கவர்னர் முதல் எளிய காவலாளி வரை எல்லா இனத்தாரும் இவ்விழாவில் பங்குகொண்டு வழிபடுவர். தமிழ்க்கடவுளான முருகனுக்கு அயல் நாடுகளிலும் இங்கும் கோயில் கண்டு, "காவடி," எடுத்துச் சிறப்பிக்கும் சீர்மை குறிக்கத்தக்கதாகும்.

**சமய வளர்ச்சியில் பிறதொண்டு:**

சமய குரவர் நால்வர், நாயன்மார்கள், முருகப்பெருமானின் பல வகைப்பட்ட பெயர்கள் ஆகியவற்றைத் தம்மக்களுக்குப் பெயராக இட்டு, மறுமலர்ச்சிக்கு வழிகோலியுள்ளனர். பெண்டுகளும் சமயப்பற்று மிக்கவராவர். ஆச்சிகளாகக்கட்டிய கோவிலும், மண்டகப்படிகளும் நிரம்பவுண்டு. மேலும், தம் மக்களுக்குப் பாலூட்டித் தாலாட்டும் போது இப்பற்றுக்களையும் கலந்தூட்டி வருகின்றனர். "சாமி தந்த தவப்பயனோ?" 'குளிக்கக்குளம் வெட்டி, கும்பிடவும் கோயில்கட்டி அசராமல் அன்னமிடும் அருச்சுனவா பேரனோ?" எனப்பாடித் தாலாட்டுவர். இன்னும், சொக்கரின் திருவிளையாடலும், வள்ளி திருமணச் செய்தியும், தாலாட்டாக ஒலிப்பதை நகரத்தார் வீடுகளில் கேட்கலாம். ஆச்சிமார்களின் பணிகளைக் கவிஞர் கொத்தமங்கலம் 'சுப்பு' பாராட்டிப் பாடுகிறார்.

மேலும் நகரத்தார் சமய இலக்கியங்களைப் பதிப்பித்தும், பரிசிலாக வழங்கியும், அவற்றிற்கு உரை எழுதியும், தாமே பத்தி இலக்கியங்கள் யாத்தும், பிறரைக்கொண்டு நூல்கள் செய்வித்தும், பத்தி நெறி பரப்ப இதழ்கள் நடத்தியும், சைவ சமய நூல்கள் பெருகத் துணைசெய்தும், தொண்டு செய்துள்ளனர்.

இராமச்சந்திரபுரம், தர்ம பூசணம் என்று போற்றப்படுகிற தீ. நா. மு. முத்தையா செட்டியார் அவர்கள், திருஅருட்பா, திருவாசகம் ஆகிய நூல்களைச் சுத்தப் பதிப்பாக வெளியிட்டும், பரிசாக வழங்கியும் உள்ளனர். டாக்டர் உ. வே. சா. நூல்கள் வெளிவரவும் துணைபுரிந்துள்ளனர். திரு. வி. க.வின் முருகன் அல்லது அழகு வெளிவர குமரப்பா துணைநின்றார். சைவ சித்தாந்த வித்தகர், முதுபெரும் புலவர், மகா மகோபாத்தியாய பண்டிதமணி மு. கதிரேசச்செட்டியார் அவர்கள், திருவாசகத்தின் பல பகுதிகளுக்கு அரிய உரை வகுத்துள்ளனர். பாடுவார் முத்தப்பச் செட்டியார் பல பத்திப்பாடல்கள் செய்துள்ளார். வன்றொண்டர் எனச் சிறப்பித்துத் திருவாவடுதுறை ஆதீனம் பாராட்டிய நாராயணன் செட்டியார் "சிவஞான போத லகு வசனம்" இயற்றினார். பண்டிதமணி அவர்கள் "சமயக்கட்டுரைகள்" என்றே ஒரு தொகுதி வெளியிட்டனர். மகா வித்துவான் மீனாட்சி சுந்தரம் பிள்ளையைக் கொண்டு, பல தலபுராணங்கள்

இயற்றிவித்துள்ளனர். வீரவனபுராணம் இப்படிப் பட்டதே!. மு. ரா. கந்தசாமிப்புலவரைக் கொண்டு அரிமழம் தலபுராணம் செய்வித்தனர். "சிவநேசன்" என்ற சமய இதழும் வெளிவந்தது.

இவ்வாறு எல்லாத் துறையாலும் "சைவம்" மறுமலர்ச்சிபெற சோழருக்குப் பிறகு நகரத்தார்களே முன்னின்று நிறைவு செய்தனர். மல்குசீர் தொல்காப்பியர், "மன்னர் பின்னோர்"[10] என்று மொழிந்ததை, இன்றளவும் இவர்கள் நிலைநாட்டி வருகிறார்கள்.

## அடிக்குறிப்புக்கள்

1 அமரர்ப்பேணியும் ஆவுதி அருத்தியும் நல்லானொடு பகடு ஓம்பியும் — பட்டினப்பாலை — 200

2 அறநெறி பிழையாது ஆற்றின் ஒழுக்கி-பட்டினப்பாலை-500

3 (அ) வந்த செல்வத்தின் வளத்தினுல் வரும்பயன் கொள்வார் அமர்நீதி — 3
(ஆ) வேண்டும் யாவையும் இல்லையென்னுதே—முன்கொடுத்து இயல்பின் நின்றவர் — இயற்பகை — 2

4 (அ) இயற்பகை நாயனுர் (ஆ) அமர்நீதி நாயனுர்
(இ) மூர்த்தி நாயனுர் (ஈ) காரைக்காலம்மையார்
(உ) கலிக்கம்பநாயனுர் — திருத்தொண்டர் வருணம் — திருத்தொண்டர் பெரியபுராணம்—8 ஆம் பதிப்பு, ஆறுமுகநாவலர்

5 நாட்டுக்கோட்டை நகரத்தார் என்னும் மகுடதனவைசியரின் மரபு விளக்கம்—பக்கம்—6

6 செட்டிநாடும் தமிழும்—பக். 51 2 ஆம் பதிப்பு — சோம. லெ.

7 நாட்டுக்கோட்டை நகரத்தார்—பக்கம்—286,—289

8 ,, ,, பக்கம்—190—192

9 திருத்தலப்பயணம்—1966 பக்கம்—408—421, 422

10 தொல்—பொருள் சூ. 32

# மாணிக்கவாசகரின் வழி

தொன்மை வாய்ந்த சமயங்களுள் சைவமும் ஒன்று. இருக்கு வேதத்திலும், யசுர் வேதத்திலும் சிவனைப்பற்றிய குறிப்புக்கள் உண்டு. உபநிடதங்களும் சிவனைக் குறித்துப் பேசும். சிவன், உமையம்மை பற்றி வரும் குறிப்புக்கள் சங்க இலக்கியத்திலும் சங்கம் மருவிய சிலப்பதிகாரம் மணிமேகலை ஆகிய காவியங்களிலும் வருதல் காணலாம். எனினும் தமிழ் மக்கள் இடைக்காலத்தில் சைவ உணர்ச்சி குன்றி இருந்தனர். சமணம், பௌத்தம் ஆகிய புறச்சமயத் தலையீட்டால் தலைதடுமாறி, "உலக இன்ப நுகர்ச்சியே அமையும். இறைவனைப் பற்றிக் கவலையில்லை." என்ற உணர்வு கொண்டனர். "இருவினைப் பயன் உண்டே அன்றி இறைவன் இல்லை" என்றனர். இங்ஙனம் தமிழகத்தில் காரிருள் கவ்வியிருந்த நேரத்தில் புறச் சமயக் கோட்பாடுகளை விடச் சைவ சமயத்தின் கொள்கைகள் திட்ப ஒட்பம் மிக்கவை என்பதைத் தெளிவுபடுத்தச் சமய குரவர்கள் ஆயிரக்கணக்கான பாசுரங்களையும் ஆக்கி அளித்தனர். தெருவெல்லாம் சிவபெருமான் புகழ் ஒலித்தது. கோவிலெல்லாம் ஐயனின் போற்றித் திருவகவல் ஓதப்பட்டது. இப்பத்தி நெறியைக் காட்டிய முத்தர்தான் மாணிக்கவாசகர். இவர் வரலாறு பற்றியும், காலம் பற்றியும், பற்பல வேறுபாடுகள் நிலவுகின்றன. அச்சுழிப்பட்டுத் தடுமாறுமல், இவர்காட்டிய வழிபற்றி இங்குச் சிந்திக்கலாம்.

**மாணிக்கவாசகர் காட்டும் இறைவன் :**

ஐம்பெரும் பூதங்களின் சேர்க்கையும் மாற்றமுமே உலகத் தோற்றமும் அழிவுமாகும். பூதங்கள் தாமே இயங்காதவை ; இயக்குபவனுல் செயற்படும். இப்படி இயக்கும் தலைவன் சிவபிரான், அனைத்துலக உயிர்களையும் "ஆக்குவான் காப்பான் அழிப்பான் அருள்தருவான் போக்குவான்" என்று மாணிக்கவாசகர் கூறுவர். இப்பூதங்களையும் இவற்ருல் உலகையும் இவற்றை நுகரப் புலன்களையும் துய்க்க உயிரையும் உடலையும் இறைவன் படைக்கிருன். ஆனுல் அவ்விறைவனை யாரும் படைக்கவில்லை. அவன் இருவினைக்கும் மும்மலத்திற்கும் ஆட்பட்டு, கருவிலே தங்கி இன்னலுறுதல் இல்லை. இறைவனே "பிறப்பு இறப்பற்றவன்." முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம்பொருளாய் விளங்குகிறவன். பழமையாய்ப் போவதால், மூத்துப் பழுத்து முடியும் இயல்பினனு? எனின் இல்லை. "பின்னைப் புதுமைக்கும் மீண்டும் புதியனுய்ப் பொலியும் இயல்பினன். ஆகவே அவன் ஆதியும் அந்தமும் இல்லாதவன். தூய அறிவொளியனுய் அருளுடையவனுய் விளங்குபவன்.

மக்கள், மயங்கும் அறிவினர். தவருன வழியும் காட்டுவர். கூர்த்த அறிவினரும் தோற்றுப் போவதுண்டு. இறைவனே பிழையாத அறிவினன் : தவறே இழைக்காதவன் ; நல்வழி காட்டுபவன். நாம் துன்ப இன்பங்களால் காய்தல் உவத்தல் உடையவராய்த் திகழ்கிருேம். இறைவன் "இன்பதுன்பம் இல்லாதவன்." நாம் பிறவிப் பெருங்கடலில் துயர்ப்படுகிறவர்கள்.

இறைவன் பிறவியை வென்றவன். உயிரைக் கவர்ந்து மீளும் காலனையும் தன்காலால் காய்ந்த ஆற்றலோன். சிவன் அன்பர்க்கு அன்பன், அவன் அண்ணுமலையாக ஓங்கி வளர்ந்து ஒளிப்பிழம்பாய் விளங்கிஞன். செருக்குற்று அன்பின்றித் தேடிய மூவரும் தேவரும் அவனைக் காண இயலாமல் கலங்கினர். இறைவன் அன்பிலார்க்குக் காட்சி தருவதில்லை. சிவபிரான் தலைமைப்பாடு உடையவன். அவன் எப்போதும் எதற்கும் எவரையும் கரங்குவித்து வேண்டியதில்லை. அவன் தேவதேவன், ஆதிமுதல்வன், எம்மொழியையும் விடத் தமிழ்மொழியில் தணியா வேட்கையுடையவன். தமிழ்கெழு மாமதுரையில் இருந்து தமிழ்ச்சுவையைத் துய்த்தவன். பத்தி வலையில் படுகிறவன். எனவேதான் மாணிக்கவாசகரை வலிதில் ஆண்டுகொண்டு அருள் செய்தான். புலனடக்கிய முனிவருக்கும் கரந்து நின்றவன். வாயே கலசமாக - ஊனே உணவாகப் படைத்த கண்ணப்பருக்கு அன்பு காரணமாக அகப்பட்டு நின்ருன். இறைவனை எப்பெயர் சூட்டியும் வணங்கலாம். எந்த இடத்திலும் அவன் நிறைந்திருப்பதால் எல்லா ஊரும் அவனுக்கு உரிமை. அவன் அருளைப் பெற வேண்டுமா ?

இறைவன் அருள் நமக்கு இருந்தால்தான் பத்தி மனமும் வாய்க்கும். மெய்யடியாரின் நட்பு கிட்டும். மணிவாசகர் இப்பேறு பெற்றவர். இறைவனே விரும்பி வந்து திருவடி சூட்டிஞர். குறைவாகக் கொடுத்து நிறைவாகப் பெறுவதே வணிகத்தில் இயற்கை. அதுவே வருவாய் பெருக்கும் வழி. இங்கு, இறைவன் நிறைந்த தன்னைக் கொடுத்து, நிறைவில்லா வாசகரைப் பெற்றுக் கொண்டாராம். இதில் யார் சமர்த்தர் ?

தந்ததுன் றன்னைக் கொண்டதென் றன்னைச்
சங்கரா ! ஆர்கொலோ சதுரர் ?
அந்தமொன் றில்லா ஆனந்தம் பெற்றேன்,
யாதுநீ பெற்றதொன் றென்பால் ?

(கோயில் திருப்பதிகம் — 10)

"வினையேன் அழுதால் உனைப் பெறலாமே"

(திருச்சதகம் — 90)

என அடக்கமாக இறைப்பெருமையையும் தன் எளிமையையும் காட்டுகிறார்.

**இறைமை மறைக்கும் தடைகள் :**

அன்பருக்கு எளிமையாகும் இறைவன் நல்லருளை எல்லோரும் பெற்றுவிட முடிகிறதா ? முடிவதில்லை. ஏன் ? "வெந்துவிழும் உடற்பிறவி மெய்யென்று வினைபெருக்கி" வாழ்கிறோம். எப்படிப்பட்ட வினை ? 'பாசம்' என்னும் தாழருவி மூழ்கித் தடுமாறுகிறோம். பாசம்தான் இருவினைகளை இயற்றச் செய்கிறது. பாசம் என்றால் என்ன ? நான் என்ற அகப்பற்றும் எனது என்ற புறப்பற்றும். இந்த அகப்பற்றால் - "எல்லாம் நம் செயல் என்றும், நம் திறம் என்றும் - நம் செல்வாக்கு என்றும் நம் சூழ்ச்சி என்றும்" - செருக்கித் தருக்கித்திரிகிறோம், சிவபெருமானை மறக்கிறோம். இறைவனை மதித்திலோம். இறைவன் சிறப்பை உணராது செருக்கால் அழிந்தவர் - தேவர் அரக்கர் ஆகியோரிலும் உண்டு. இந்த அகப்பற்றால் அழிவே நேரும். எனது என்பது புறப்பற்று. புறப்பற்றால் நாம் பொய்நெறி பெருக்குகிறோம். செல்வம், சுற்றம்

மங்கையர் இணக்கம், மற்றுள்ள இன்பம் இப்படி எண்ணி எண்ணிக் காலத்தை அவமே கழிக்கிறோம். இவ்வெண்ணமும், அவாவும் தற்கொல்லிகள். இந்த அகப்பற்று, புறப்பற்ருகிய பாம்பின் கடியில் இருந்து பிழைத்தல் அரிது.

இன்னும் மக்கட்பிறவியில் இயற்கையில் எழும் இடையூறுகள் எண்ணிறந்தன. காலை மலக்கழிவு, இல்லையேல் இவ்வுடல் எல்லாப் பிணிக்கும் இருப்பிடமாய் விடும். நடுநிசிப்பசி, உறக்கம், பயணம், பெண்ணுசை, அவா, கல்விஇன்மை, செல்வமிகுதி இவற்ருல் அலைக்கப் படுகிறோம். புலன்வழி நின்று நலன் அழிகிறோம்.

இயற்கைத் தடைகள் தவிர நாமாக வலைபின்னிச் சிலந்தி போலத் தானே அழிகிறோம். செயற்கைத் தடைகள் ஏற்படுத்திக் கொள்கிறோம். "நாத்திகம் பேசி நாத்தழும்பேறப் பெறுகிறோம்". பல் சமய வேறுபாடுகள் கூறி மலைகிறோம். சாதி, குல உயர்வு கூறிச் சூழ்ச்சி செய்கிறோம். அரசியல் பேசி அலைகிறோம். மணிவாசகரோ அரசர் தம் உறவையே வெறுக்கிருர். அமைச்சர் பதவியும் துறந்தவர் அவர். மேலும், அரசர் இவர்க்கு இடையூறு செய்தாரன்றோ?

பெண்ணுசையைப் பெரிதாகக் கருதுகிறோம். இதனை அடிகளார் பல இடங்களில் தம்மேல் ஏற்றிக் கூறுகிருர். மணிவாசகர் உண்மையில் துறவி. மக்களிடம காணப்படும் குறைகளைத் தம்பால் ஏற்றிக் கூறுகிருர். நமக்காக இரங்குகிருர். நம்மையும் அருள்பெறத் தூண்டுகிருர். அடிகளார் தம்மைக் குறையுடையவராகக் கூறும் இடங்களை இவ்வகையிலேயே எடுத்துக்

கொள்ளுதல் வேண்டும். பெண்ணலத்துய்ப்பு இறைமாட்சியை அறியவொட்டாது தடுக்கிறது. ஐம்புல நுகர்ச்சிக்கும் பெண் நிலைக்களனாக விளங்குகிறாள். ஆகவேதான் இப்பாலுணர்ச்சி நாடு, மொழி, இனம் கடந்து அவாவி நிற்கிறது. இக்காம உணர்வு தலைதூக்கும்போது அறம், முறை, உறவு ஆகிய கட்டுக் கோப்புக்களையும் கடந்து உதறித் தள்ளிவிட்டு முயக்கத்தை நயக்கின்றனர். இந்த உணர்ச்சியின் வேகத்தை, வெல்லுதல் அரிது. எனவே அடிகளார் பிறவியை உண்டாக்கும் இவ்வினையையும், இதற்குக் கருவியான பெண்ணையும் வெறுக்கிறார். இதனைப் பல இடங்களில் சுட்டிக் "கூர்த்த நயனக்கொள்ளையிலிருந்து" பிழைப்பிப்பாய் என்று இறைவனை வேண்டுகிறார். இதனை அவன் ஆற்றலால்தான் வெல்லமுடியும். சிவனே அப்படி வென்றவன் என்பதைத்தான் காமக்கடவுளையே இறைவன் வெந்தழலில் வேகவைத்தான், என்று மணிவாசகர் கூறுகிறார். முற்கூறிய பலவகைப்பட்ட பகைகளால் நமக்குத் தெய்வத்தைப் பற்றிய தெளிந்த சிந்தை வருவதில்லை; வந்தாலும் வளருவதில்லை. வளர்ந்தாலும், "மாடு வேண்டும், மனை வேண்டும், மனைவி வேண்டும். பிற இன்பம் வேண்டும், என்று இன்னவாறு வேண்டுகிறோமே தவிர, இறையடியை மறவாதிருக்கவோ , வினையிலிருந்து மீளவோ, வேண்டுவதில்லை.

**மாணிக்கவாசகரின் வேண்டுகோள்:**

ஆனால், கல்லைப் பிசைந்து கனியாக்கும் மொழியாராகிய வாசகரின் வேண்டுகோள், முற்றும்

மாறுபட்டது; பரிபக்குவம் மிக்கது. நாம் அறிந்து போற்றி வேண்டத் தகுவது. மணிவாசகர் இவ்வுலகில் இருக்கும் மட்டும், சிவனே இமைப்பொழுதும் நீங்காமல் நினைக்கும் சிவனடியார் திருக்கூட்டத்தில் இருக்க நினைத்தார். இதனைப்பல இடங்களில் வேண்டுகிறார். ஏன்? நல்லாரைக் காண்பதும் நன்றே நல்லார் சொல் கேட்பதும் நன்றே' ஆதலின், இருக்கும் இறைப்பற்று குன்றாமல் திரியாமல் மேலும் வளரவும், காக்கவும் பழவடியார் நடுவே இருத்தல் வேண்டும் என்று வேண்டுகிறார். அடியாருடன் இருப்பதாயின், நரகத்தில் இடர்ப்படவும் தாம் தயங்கவில்லை என்று கூறுவதன் வாயிலாக அடியாரின் அருமையையும் இறைவன் அருளையும் புலப்படுத்துகிறார்.

இறைவனை நேரே கூடி மகிழவேண்டும் என்ற விருப்பினால் தலைவியாகத் தன்னைக் கற்பித்துக் கொண்டு இறைவனைத் தலைவனாக வைத்து மருவி மகிழ முந்துகிறார். பெண் இன்பத்தில் அழுந்தும் உலகினருக்கு, அவ்வின்பத்தின் வழியாகவே இறையுணர்ச்சியை ஊட்ட விழைகிறார். தெரிந்த இன்ப சுகத்தைக் காட்டித் தெரியாத பேரின்ப மாட்சியை உணர்த்துகிறார். கசப்பு மருந்தை இனிப்புப் பொருளில் பொதிந்து அளிக்கும் தாயின் செய்கைபோல், இவ்வித்தையைச் செய்கிறார். இவர் இயற்றிய திருக்கோவையார் பாடல்கள் நானூறும் இந்த வகையைச் சேர்ந்தவையே.

மணிவாசகருக்கு உலகப்பற்று அறவே இல்லை. அவருக்கு இறைப்பற்றே தலையாயது. இறைவனைக் கண்ணாரக் காண விழைந்தார். ஆகவே அவர்

வேண்டுதல்கள் யாவும் உலக இன்பங்களைப் பற்றியதாய் இல்லை. நம்மைப் போல் செல்வம், புகழ், இன்பநுகர்ச்சி ஆகியவற்றைச் சிந்தையாலும் தீண்டவில்லை. மாருக உயிர்ப்பிறவிக்குக் காரணமான ஆணிவேரையே ஆழக்கல்லி, அழிக்க விரும்பினுர். மாயப் பிறப்புத்தானே நம்மை மயக்குகிறது? இருவினையாற்றி வாட்டுகிறது? ஆகவே அப்பிறவியை அறவே களைய ஆசைப்பட்டார். இதனையே பலகாலும் வேண்டினுர். இதற்கு இறைவன் திருவடியே துணை. அவன் தாழ்நிழல் அடைவதே - அஃதாவது முத்தி அடைவதே வழி! அதை வேண்டுகிருர்; முத்திக்கு வழியாது? பத்தி நெறிதான்.

இறைவனுக்குப் பன்மலரெடுத்துச் சூட்டவேண்டும். பாமாலை சாத்தவேண்டும். திரு அஞ்செழுத்து எண்ண வேண்டும். அதனை நாவாரச் சொல்ல வேண்டும். இறைவன் திருவுருவைச் சுற்ற வேண்டும். தொடர வேண்டும். விடாது பற்ற வேண்டும். இது மாணிக்க வாசகர் காட்டும் வழியாம்.

# நாச்சியார் பாடல் திறம்

பத்திமையோடு தமிழ் வளர்த்த பாவலர் பலர் தமிழகத்தே வாழ்ந்தனர். அவருள் பெண்பாலரும் இருந்தனர். சங்கப்புலவருள்ளும் பெண்பாலர் பற்றிக் கேட்கிறோம். சைவம் - வைணவம் இரண்டிலும் முறையே காரைக்காலம்மையாரும், ஆண்டாளும் இன்னிசையால் இரு துறைகளையும் வளர்த்த மாதரசிகளாவர். இருவர் பாடல்களும் செந்தமிழ்க்கு நறுந்தேன் ; பெருஞ்செல்வம். நாச்சியார் எனப்படும் ஆண்டாளின் பாடற்றிறனை ஈண்டு ஆராயலாம்.

**வரலாறு :**

கோதை, ஆண்டாள், நாச்சியார், சூடிக்கொடுத்த நாச்சியார் என இவர் அழைக்கப்படுவர். வில்லிபுத்தூரில் தோன்றிய விட்டு சித்தர் என்ற அந்தணரின் முன்னோர், அரசியற் கருமம் செய்தவர். இவர் அங்குள்ள வடபெருங்கோயில் உடையானுக்கு ஆட்பட்டுப் பூமாலை தொடுக்கும் செய்பணியில் ஈடுபட்டவர். இவர் திருத்துழாய்க்கு மண் கொத்தி, நீர்வார்க்குங்கால் ஒருபொழுது பூமாதேவியே பெண்பிள்ளையாய் துளவச் செடியின் அடியிற்கிடந்தார். விட்டு சித்தர் உகந்தெடுத்து வளர்த்து நாரணன் திருப்பணியில் பழக்கினர். ஆண்டாள், பிறந்து மொழிபேசிச் சிறந்த நாள் தொட்டு மதுசூதனன்பால் மனம் பறிகொடுத்து வளர்ந்தார். தந்தை கொணரும் மலர்களை மாலையாக்கி அதன் அழகு சிறந்துள்ளதா என்று காண, தானே அணிந்து, ஆடிபார்த்து, அழகு சிறந்தால் அனுப்பி வைத்தார். ஒருநாள் விட்டுசித்தர் இச்செயலைக் கண்டு

மனம் வெதும்பி "யாது செய்தனே?" என வருந்தி வடபெருங்கோயிலுடையானுக்கு மாலை கொண்டு செல்லவில்லை. மாயவன், சித்தர் கனவில் தோன்றி, "ஏன் மாலை கொணரவில்லை" என வினவ, சித்தர் நிகழ்ந்தது கூற, நாரணன் "நாம் உகந்தேற்பது அம்மாலையையே - அதன்மணம் சிறந்தது" எனக் கூறச் சித்தர் வியந்து கொண்டு சென்ருர். அன்றுதொட்டு கோதை - என்ற இயற்பெயரினும் சூடிக்கொடுத்த நாச்சியார் என்ற பெயர் விளங்கித் தோன்றியது. அரங்கன் நெஞ்சத்தையும் அடியார் நெஞ்சத்தையும் "ஆண்டவள்" என்பதால் ஆண்டாள் ஆனுள். அவள் விரும்பியபடி நடக்கச் சித்தர் விடுத்தார். அவளோ அரங்கனை மணந்து சிறக்க எண்ணினுள். இஃது ஈடேறுமா என்று ஏங்கிய காலை அரங்கன், சித்தர் கனவில் "சூடிக்கொடுத்தாளைத் திருவரங்கம் அழைத்து வருக, யாமே ஏற்போம்" என வானெலித்தார். சித்தர் அங்ஙனம் அழைத்துச் சென்ருர். யாவரும் காண ஆண்டாள் பாம்பணை மிதித்துப்பல்வளை குலுங்க நாணி அரங்கன் திருவடிப்பக்கல் இருந்து கால்வருட, உடன் கலந்தாள். சித்தரை நோக்கி "நீர் எம் மாமன் ஆனீர், இனி வில்லிபுத்தூர் சென்று எம்கோயிற் பணியை முன்போல் செய்து வாழுதி" எனக்கூறி அரங்கர் விடை தந்தார் என்பது மரபுவழி வரலாறும்.

திருவாடிப் பூரத்துச் செகத்துதித்தாள் வாழியே
திருப்பாவை முப்பதூஉம் செப்பினுள் வாழியே
பெரியாழ்வார் பெற்றெடுத்த பெண்பிள்ளை வாழியே
பெரும்பூதூர் மாமுனிக்குப் பின்னுனுள் வாழியே

ஒருநூற்று நாற்பத்தொரு மூன்றுரைத்தாள் வாழியே
உயரரங்கர்க் கேகண்ணி யுகந்தளித்தாள் வாழியே
மருவாரும் திருமல்லி வளநாடி வாழியே
வண்புதுவை நகர்க்கோதை மலர்ப்பதங்கள் வாழியே.

— என்ற அப்பிள்ளை அருளிய பாடலையுங்காண்க

இதற்கு அகச்சான்றுகள் என்னென்ன உண்டு எனக்காணுதல் வேண்டும்.

"வில்லிபுத்தூர் விட்டுசித்தன் விரும்பிய சொல்" (1 - 12) "தென்புதுவைப்பட்டன்" (2 - 21)

"வேயர் புகழ்விட்டு சித்தன் சீரால் விரித்தன உரைக்கவல்லார்." (7 -11)

"வேதப் பயன் கொள்ளவல்ல விட்டுசித்தன் சொன்ன மாலை (9 - 10)

"வேயர்தங்கள் குலத்துதித்த விட்டுசித்தன் மனத்தே கோயில் கொண்ட கோவலன்" (4 - 11) என்று விட்டு சித்தரே தம் இறுதிப் பாடல்களில் (கடைக்காப்புச் செய்யுளில்) கூறுவதால் இவர் முன்னோர் வேயர் தொழில் செய்தவர்கள் என்பதும், அந்தணர் என்பதும் பட்டர்பிரான் என்ற பட்டம் உண்டு என்பதும், வில்லிபுத்தூருக்குத் தென் புதுவை என்ற பெயர் உண்டு என்பதும் தெரிய வரும்.

கோதையார் பாடல்களின் கடைக்காப்புச் செய்யுட்டுணையால் கீழ்வரும் செய்திகளை அறியலாம்.

"புதுவையர் கோன் விட்டுசித்தன் கோதை" —(1-10)
"புதுவையர் கோன் பட்டன் கோதை" — (3-10)
"வேயர் பகழ்வில்லி புத்தூர்க்கோன் கோதைசொல்" (6—11)
"சித்தன்கோதை இன்னிசையால் சொன்ன செஞ்சொல் மாலை" — (12-10)

என்று வருதலால் இவர் பெயர், கோதை என்பதும், வில்லிபுத்தூர் வாழ்ந்தவர் என்பதும், விட்டுசித்தன் திருமகள் என்பதும் அவர்க்குப் பட்டர்பிரான் என்ற பட்டம் உண்டு என்பதும், இப்பாடல்கள் இன்னிசைபட இராகமுடன் பாடப் பெற்றவை என்பதும் போதரும். ஆண்டாளின் 11வது பாடல் தொகுதி "திருவரங்கத்துச் செல்வனைக் காமுறுதல்" என்று அமைந்துள்ளது. "திருவரங்கர் ஆமுகத்தை நோக்காரால் அம்மனே அம்மனே" — (11-1) என்ற பகுதி இவர் திருவரங்கனை மணக்க விழைந்தமையைக் காட்டலாம்.

கோதை, பெரியாழ்வாரின் வளர்ப்பு மகள் என்பதற்கோ, சூடிக்கொடுத்தமைக்கோ பாடல்களில் நேரே சான்றில்லை. ஆயினும் திருப்பாவையின் தனியன் பாடல்களில்

"அன்ன வயற்புதுவை யாண்டாள் அரங்கற்குப்
பன்னு திருப்பாவை பல்பதியம் — இன்னிசையால்
பாடிக் கொடுத்தாள் நற் பாமாலை, பூமாலை
சூடிக் கொடுத்தாளைச் சொல்லு"

என்று வருகிறது. இங்குதான் ஆண்டாள் என்ற பெயரையும் சூடிக்கொடுத்தாள் என்ற நிகழ்ச்சியையும்

தெரிகிறோம். இப்பாடல் உய்யக்கொண்டாரால் பிற்காலத்தே பாடப்பட்டது.

இவற்றைப் பாடிய ஆண்டாள், பார்ப்பனரிடையே பயின்று வளர்ந்தவர் என்பதற்குச் சில சொற்கள் சான்று பகரும். கீழ்வரும் சொற்களைக் காண்க.

மாமீ, தீர்த்தம், வசவு, கீர்த்திமை, புழக்கடை, சன்மானம், அலங்கரித்து, பிராயம், சங்கற்பித்து, சிரமப் பட்டோம், கருளக்கொடி, தருமம், தித்தித்து, மேலாப்பு, அக்காரஅடிசில் என்ற சொற்கள் பாட்டில் வருகின்றன.

இவர் பாண்டி நாட்டுப்புலவர் என்பதற்குச் சில சான்றுகள் காட்டாகலாம். கீழ்வருவன அத்தகையன.

சுளகு, முற்றம், மச்சு, காலிகள், வெள்ளென, பெண்டாட்டி, சுள்ளி, சிக்கென, ஒட்டாரம், கூகி, தடா கண்ணுலம் — இவை இந்நாட்டில் மிகுந்து பயில்வனவாம்.

**காலம் :**

இவர் காலம் பெரியாழ்வார் காலமான சீவல்லப தேவன் காலம் என திரு. மயிலை மாதவதாசனும், சீமாறன் சீவல்லவன் காலமாகிய கி.பி. 9-ஆம் நூற்றுண்டின் இடைப்பகுதி என டாக்டர் இராசமாணிக்கனரும் கூறுவர். ( நா. திவ. பிர.-பக்-44 மயிலை மாதவதாசன் பதிப்பு-1962) கலைக்களஞ்சிய ஆசிரியர் கி.பி. 8-ஆம் நூற்றுண்டு என்பர். (தொகுதி-1பக்-363)

**நூல்களும் யாப்பும் :**

நாச்சியார்-திருப்பாவை என்ற தலைப்பில் 30 பாடல்களும், "நாச்சியார் திருமொழி" என்ற தலைப்பில் பதிநான்கு உள்தலைப்புக்களில் 143 பாடல்களும் இன்று காணப்படும். இவர் கையாண்ட யாப்புக்கள் வருமாறு :

| | | |
|---|---|---|
| அ. | கொச்சகக்கலிப்பா | 30 + 10 = 40 |
| ஆ. | கலிநிலைத்துறை | 10 |
| இ. | கலிவிருத்தம் | 62 |
| ஈ. | ஆசிரிய விருத்தம் | 61 |
| | ஆக — | 173 பாடல்கள் |

இவற்றில் கலிவிருத்தமும் ஆசிரிய விருத்தமும் எண்ணிக்கையில் அதிக அளவு வேறுபடவில்லை. ஒன்று தான் வேறுபாடு. ஆகவே சம அளவு உள்ளனவாய்க் கருதலாம். கொச்சகம் இரண்டாம் இடத்தையும், கலிநிலைத்துறை மூன்ரும் இடத்தையும் பெறுதல் காண்க. இவர் காலத்தில் விருத்தங்கள் பெருவழக்காயின என இதனுல் தெரியலாம். இவர் வெண்பா, கட்டளைக் கலித்துறையை ஆளவில்லை என்பதையும் நோக்குதல் வேண்டும்.

**கொச்சகக்கலி :**

இந்த யாப்பைப் பற்றித் தொல்காப்பியத்தில் நாம் கேட்கிறோம்.

"வெண்பா இயலான் வெளிப்படத் தோன்றும்
பாநிலை வகையே கொச்சகக் கலியென
நூல்நவில் புலவர் நுவன்றறைந் தனரே"

(தொல்-செய்யுள்-148)

என்றார் காப்பியர். பெயரளவில் இங்குக் கொச்சகம் குறிக்கப்பட்டாலும் சமயகாலத்தில் வரும் கொச்சகம் வேறு; தொல்காப்பியர் சுட்டிய கொச்சகம் வேறு. தொல்காப்பியர், பல உறுப்புக்களைக் கொண்ட கொச்சகத்தைக் கூறினர். சமயகாலத்தில் வரும் கொச்சகப்பா - பண்டு கூறப்படும் **தரவு என்ற** ஒரு உறுப்பு மட்டுமேயாம். இது நான்கடிக் கொச்சகம், ஆறு அடிக் கொச்சகம், எட்டு அடிக்கொச்சகம் என்றவாறு சமயகாலத்தில் வருவதாயிற்று. முதலில் சிலப்பதிகாரத்தில் இத்தகு கொச்சகப்பாவை வாழ்த்துக் காதையில் காண்கிறோம். அவை 5 அடியாக இருத்தல் ஒரு புதுமை. திருவாசகத்தில் திருக்கோத்தும்பி நான்கடிக் கொச்சமாக வருகிறது. ஐந்தடிக் கொச்சகம், சிலம்பில் வருதலோடு அம்மானைவரி, ஆறு அடிக் கொச்சகமாக வருகிறது. திருவம்மானை - திருப்பொன்னூசல் ஆகிய இரண்டும், திருவாசகத்தில் ஆறுஅடிக்கொச்சகமாக வருகின்றன. திருவாசகத்தில் திருவெம்பாவை எட்டடிக் கொச்சகமாக வருகிறது. இதே போக்கில் ஆண்டாள் பாடலில் திருப்பாவையில் எட்டடிக் கொச்சகம் வருகிறது. ஆகவே, தொல்காப்பியர் சொன்ன தரவு, பிற்காலத்தே தனிநிலையில் வந்து, கொச்சகப்பா என்று பெயரும் பெற்றது என்றும் அதில் அடிக்கணக்கில் பல விகற்பங்கள் உள்ளன என்றும் அறிகிறோம். நாச்சியார் பாடலில் திருப்பாவையும்,

" திருவரங்கனைக்காமுறுதல் " என்ற தலைப்பில் வருவனவும் கொச்சகம் என்று அறிதல்வேண்டும். ஆக 40 பாடல்கள் கொச்சகம். இந்த யாப்பில் பெரியாழ்வார் பாடவில்லை.

**கலிநிலைத்துறை :**

அளவடி நான்கில் ஐந்து சீரில் வந்தால், அது கலிநிலைத்துறையாம். இது பற்றித் தொல்காப்பியர் கூறவில்லை. அவர் பாவகைகளைக் கூறினுரே தவிர பாவினங்களைக் கூறவில்லை. இந்த யாப்பும் சமய காலத்தில் காணப்படுகின்றது. ஆயின் இது சிலம்பில் இல்லை. திருஞானசம்பந்தரின் திருவெண்காட்டுப்பதிகமும் (2) திருக்கலிக்காமூர்ப்பதிகமும் கலிநிலைத்துறையாம். சுந்தரமூர்த்தியின் திருநின்றியூர்ப் பதிகமும் இந்த வகையாப்பிற்று. பெரியாழ்வாரின் நாலாம் பத்து இந்தயாப்பிற்று. திருவாசகத்தில் ஆனந்தப்பரவசம், அடைக்கலப்பத்து ஆகியவை கலிநிலைத்துறையாம். இவர்களிடம் இருந்து நாச்சியார் அறிந்து, இந்த யாப்பைச் செய்கிருர். இலக்கியத்தில் இந்த யாப்புப் பெருவரவிற்று எனக் கூறவியலாது. " மால்செய் வகையொடு மாற்றம் இயம்பல்" என்ற தலைப்பில் வரும் 10 ஆவது பாடல்கள் பத்தும் நாச்சியார் பாடலில் இந்தயாப்பிற்று. இவர்பாடலில் இது ஒன்றே இவ்வகையாம்.

**கலிவிருத்தம் :**

இது, அளவடி நான்கில் நான்குசீரில் வருவது. முதன் முதலில் இதனைச் சிலம்பில் காண்கிருேம்.

அடுத்து இந்தயாப்பில் முழுதும் காப்பியமாகச் செய்தவர்கள் திருத்தக்கதேவர், சேக்கிழார் ஆகியோராவர். இந்த யாப்பைச் சமயாச்சாரியார்களும் பெருமளவு ஆண்டனர். ஆண்டாள் பாடலில் 6 பாடல்கள் இந்த யாப்பின. இதனைப் பெரியாழ்வாரும் ஆள்கிறார்.

**ஆசிரிய விருத்தம் :**

"குயிற்பத்து" என்ற தலைப்பில் வருவது ஏழு சீராம். திருவாசத்தில் வரும் குயிற்பத்து ஆறு சீர் விருத்தம். இரண்டு குயிற்பத்திலும் கூறு முறையில் பொருள் வேறுபாடு உண்டு. 'கருங்குயிலே' என்ற விளி, எல்லாப்பாடல்களிலும் வருகிறது. வரக்கூவாய் என்பது எங்கும் வருகிறது. திருவாசகத்தில் கோயிற்றிருப்பதிகம் 7 சீரில் வருகிறது. 4, 5, 6, 7 சீர்களில் விருத்தத்தை ஆளும் நாச்சியார் - 8 சீர் விருத்தத்தை ஆளவில்லை. நாச்சியார் பாடல்களில் 6 சீர் விருத்தம் மிகுதி. ஆறு பதிகங்கள் ஆசிரிய விருத்தமாகவும், மற்றுமோர் ஆறு பதிகங்கள் கலி விருத்தமாகவும் வருகின்றன. ஏறத்தாழ எண்ணிக்கையும் சமமே.

**பாடுபொருள் :**

நாச்சியார், பெண் என்பதால் மாயவனை மருவ விழைந்து பாடுவதாகவே பலவும் உள. பல்வகைப் பொருள்களை அதற்குக் கருவியாக ஆக்குகிறார். காமனைத் தொழுது அவனை அடைய வேண்டுதல், மாயவனைச் சிற்றில் சிதையேல் என வேண்டல், கூடல் இழைத்தல்,

குயிலைத் தூதாக்கல், மேகத்தைத் தூதாக்கல், பாஞ்ச சன்யமாகிய சங்கினை விருப்புற்று விளித்துக் கேட்டல், திருவரங்கனைக் காமுறுதல், கோதையர் தமக்குள் கூறியது - என்றவாறு பல தலைப்புக்களை அமைத்துக் காதல் மலர மாலவனைப் பற்றிப் பாடுகிறார்.

மீராவும்கண்ணனை வேண்டி நின்றபெண்மணிதான். ஆயின், நிரம்ப வேறுபாடு உண்டு. மீரா - 15 ஆம் நூற்றாண்டில் இராசத்தான் மாநிலத்தில் பிறந்தவர். கண்ணனிடம் ஆராக்காதல் பூண்டவர். இவர் பாடல்களிலும் காதல் குறிப்புக்கள் உண்டு. இவர் திருமணம் ஆனபின், கண்ணனை நாடியவர். ஆண்டாள் கன்னியாக இருந்தே, சீரங்கனை அடையத் துடித்துக் காதல் ததும்பப் பாடியவர்.

***சிற்றிலக்கிய வளர்ச்சி :***

(1) திருப்பாவை: பாவைப்பாட்டு எனச் சங்க இலக்கியத்தில் காணப்படுவதின் வளர்ச்சியே இது. சிற்றிலக்கிய வகையில் இது புதியது. இவரும் மணிவாசகரும் திருப்பாவை — திருவெம்பாவை பாடினார்கள். இந்நாளில் தைப்பாவை என்ற தலைப்பில் கவியரசர் கண்ணதாசன் பாடினார். தமிழ்ப்பாவை எனச் சுத்தானந்த பாரதியாரும் பாடினார். இவை, அமைப்பால் - பாடிய யாப்பால் வேறுபட்டன. இவை தவிர வேறு பாவை நூல்கள் இன்று கிடைக்கவில்லை. ஆகவே மேற்கூறிய இவ்விரு புலவர்களே பாவைப்பாட்டின் தாயர் என அறிக.

(2) சிற்றில் சிதையேல் - என்பது இரண்டாவது தலைப்பு. இது பெண்பாற் பிள்ளைத்தமிழில் வரும் ஒரு பருவம். அதனைத் தனியாக ஆக்கி ஒருதலைப்பில் 10 பாடல்கள் பாடியது சிறப்பாம்.

(3) குயிற்பத்து, மேகவிடு தூது, கூடல்இழைத்தல், கனவு நிலை உரைத்தல், காதல்நோய் செய்தபரிசு, தலைவன் (கண்ணன்) இருக்குமிடம் கொண்டு செல்க என வேண்டல் என்ற சில தலைப்புக்கள் கலம்பக உறுப்புக்களாக வருவன; இவை பெண்பாற் கைக்கிளைப் பாடாணில் வரும் துறைகளுமாம். இவற்றை நாச்சியார் எடுத்துஇவண் பத்துப்பத்துப்பாடல்களாகப்பதிகம்போல் ஆக்கிப்பாடியிருப்பது, தமிழ் இலக்கியத்திற்கு - மரபிற்கு உரஞ்செய்து ஊட்டம் நல்கும் நன்முயற்சியாகும். இவை சிற்றிலக்கிய வளர்ச்சிக்கு அடிகோல்வன அன்றோ?

இவண், "காமனை வழிபடுதல்", கண்ணனைத் துகில் பணித்தருளுமாறு வேண்டுதல், வலம்புரிச் சங்கிற்குக் கிடைத்த பேறு, தனக்கு வேண்டும் என வேண்டுதல் - ஆகியவை இவராகப்படைத்து] மொழிந்த துறைகள் எனலாம். இவை புதியன.

**இலக்கியப் போக்கு:**

**சங்க நூற் சாயல்கள் :**

"மதயானை போலெழுந்த மாமுகில்காள்" (8, 9)

"சிந்துரச் செம்பொடிப்போல் இந்திர கோபங்கள்" (9, 1)

" தார்க்கொடி முல்லைகளும் தவளநகை
காட்டுகின்ற" (9, 2.)

என்னும் இவை சங்கநூற் சாயல் உடையவை என்று நாம் அறிவோம்.

**திருக்குறட் கருத்து :**

" பெண்ணியலார் எல்லாரும் கண்ணின்
பொதுவுண்பர்" என்பது குறள். (குறள். 1311)

இக்குறட்கருத்தை ஆண்டாள்,

" பதினாறு மாயிரவர் தேவிமார் பார்த்திருப்ப
............................... மாதவன்தன் வாயமுதம்
பொதுவாக வுண்பதனைப் புக்குநீ யுண்டக்கால்"
(7, 9)

என்று பாஞ்ச சன்யத்தை விளித்துக் கேட்கிறார்.

முன்னோர் மொழி பொருளை, நாச்சியார் ஆண்டிருப்பதைப் போல், பின்வந்தவர்கள் இவரது கற்பனை - கருத்து முதலியவற்றை எடுத்தாண்டதுண்டு.

" போய பிழையும் புகுதருவான் நின்றனவும்
தீயினில் தூசாகும்" (பாவை 3)

என்பர் நாச்சியார். நம்பியாண்டார் நம்பியோ இந்தக் கற்பனையை மாற்றிப்பாடுகிறார்.

" நெருப்பை
அருந்தஎண்ணு கின்றஎறும் பன்றே அவரை
வருந்தஎண்ணு கின்ற மலம்" (விநா. திரு. இர.
மாலை. 7)

என்றார்.

" திங்களும் ஆதித்தியனும் எழுந்தாற்போல்
அங்கண் இரண்டும் கொண்டு எங்கள்மேல்
நோக்குதியேல்" (பாவை 22)

என்பது ஆண்டாள் வாக்கு. இதனையே சுப்பிரமணிய பாரதியார்,

" சுட்டுஞ் சுடர்விழிதான் - கண்ணம்மா
சூரியர் சந்திரரோ ?" என்றார்.

வேள்வி அவியை நரி உகத்தல்போல் இறைவர்க்குரிய தன்னை மானிடர்க்குரியவராய் ஆக்கல் பிழை என ஆண்டாள் பாடுகிறார். (1, 5)

இதே உவமையைப் பாரதியார்,

"வேள்விப் பொருளினையே - புலை நாயின்முன்
மென்றிட வைப்பவர் போல்" (பாஞ்சாலி 4, 41)

என்று நரியை, 'நாயாக்கி - கற்பனையை அப்படியே எடுத்துக்கொள்ளுகிறார்.

" ஒருத்தி மகனாய்ப் பிறந்தவனும் ஒருத்தி மகனாய் வளர்ந்தவனும்" என்பது ஆண்டாள் பாட்டின் அடியையும் கற்பனையையும் கொண்டு படக்காட்சியில் பாடலாகிறது. (தாய் சொல்லைத் தட்டாதே)

**உவமைப் புதுமைகள் :**

" உழுவதோர் எருத்தினை நுகங்கொடு பாய்ந்து
ஊட்டமின்றித் துரத்தல் ஒக்குமே" — (1;9)

"செங்கமல நாள்மலர்மேல் தேன் நுகரும் அன்னம்போல்"
(சங்கு) — (7;7)

" செங்கண் கருமுகிலின் திருவுருப்போல் மலர்மேல்
தொங்கிய வண்டினங்கள்" — (9;5)

" பாம்பணை யார்க்குத் தம் பாம்புபோல்
நாவும் இரண்டுஉள " — (10;3)

"நீர்காலத்து எருக்கின் அம்பழஇலைபோல்வீழ்வேனை (8;8)

"புறம்போல் உள்ளும் கரியானை " — (14;7)

இவை இனிய புதிய கற்பனைகள்.

**நயமான கற்பனைகள் :**

" தாயைக் குடல்விளக்கம் செய்த தாமோதரனை "
(பாவை—5)

" என்னுடைய கழல்வளையைத் தாமும் கழல்வளையே
ஆக்கினரே " — (11;2)

" கருமாணிக்கம் வரக் கூவாய் " — (5;3)

" தம்மை உகப்பாரைத் தாம்உகப்பர் என்னுஞ்சொல்
தம்மிடையே பொய்யானால் சாதிப்பார் ஆரினியே "
(11;10)

"புண்ணில் புளிபெய்தாற்போல் " — (13;1)

" கொள்ளும் பயன்ஒன்று இல்லாத கொங்கை
தன்னைக் கிழங்கொடும்
அள்ளிப் பறித்திட்டு அவன்மார்வில் எறிந்து — (13;8)

" தன்கைச் சார்ங்கம் அதுவேபோல்
புருவ வட்டம் அழகிய பொருத்த மிலியை " — (14;6)

என்ற இவ்விடங்கள் நல்ல கற்பனைகளாம் ; பயில்தொறும் நாவில் இனிப்பன.

கீழ்வரும் சொற்களில் முக்கிய இலக்கண அமைப்புண்டு. அவை உற்று நோக்கற்பாலன.

மனையாட்டி, மாமீர், "கீசுகீசென", கற்றுக்கறவை, சிறுமீர்காள், குள்ளக்குளிர, சிறுமியரேமுக்கு, சிறுச்சிறிதே, செய்வனகள், சிற்றம்சிறுகாலே, விதிக்கிற்றியே நற்கொடிக்களும், போந்திலாதோமை, என்னைமார்கள் கன்னியரோமை, கூகிற்றியாகில், கண்ணீர்கள், பிராட்டி அம்மனைமீர், பேசியிருப்பனகள், ஓர்மகனை — இவை ஆராய வேண்டிய இலக்கண அமைப்புடையன.

**புராணங்கள் :**

சமய நூல்களில் புராணக் கதைகள் வாராதிருக்க ஒல்லாது. ஆண்டாள் பாடல்களில் திருமாலின் பல அவதாரக்கதைகள் வரினும், கிருட்டிணுவதாரக்கதையை மிகுத்துக் கூறுவர். அடுத்த நிலையில் இராமாவதாரக் கதைகள் வருப. ஆண்டாள் தந்தையார் பெரியாழ்வார் கிருட்டிணுவதாரத்தில் ஈடுபாடு காட்டியவர். அவரே போல் ஆண்டாளும் கிருட்டிணுவதாரத்தில் மிகுந்த அன்பு காட்டி, அடிக்கடி கூறுவர்.

**கிருட்டிணுவதாரச் செய்திகள்**

நந்தகோபன் குமரன், யசோதை இளஞ்சிங்கம் (பாவை 1, 4) ஆழிமழைக் கண்ணன் (பாவை. 4) வடமதுரை மைந்தன், தூயபெருநீர் யமுனைத்துறைவன் (பாவை 5) பேய்ச்சிமுலை உண்டவன், கள்ளச்சகடம் காலுதைத்தவன் (பாவை 6, 24) மாவாய் பிளந்தான், மல்லரை மாட்டியவன், வல்யானை கொன்றான் (15) கன்றுகுனிலாய் எறிந்தவன் (பாவை 24) குன்று குடையாய் எடுத்தவன் (ஷை) கஞ்சன் வயிற்றில் நெருப்பென்ன நின்றவன் (பாவை 25) ஆயர்குலத்தான்

குதிகொண்டு அரவில் நடித்தவன், (3, & 2 - 4) குடக்கூத்தாடியவன் (3, 6) தேவகிமாமகன் (4, 2) வசுதேவர் கோமகன் (4, 2) மருதம் முறிய நடை கற்றவன் (4, 6) கன்று மேய்த்தோன் (4,8) சிசுபாலன் தேசழித்தான் (11,9) பலதேவனை வென்ருன் (12, 7)

**இராமாவதாரம் பற்றிய செய்திகள் :**

சினத்திஞல் தென்னிலங்கைக்கோமானைச்செற்றவன் (பாவை 12 & 24) இலங்கையைப் பூசல் செய்தான் (2, 6) சேதுபந்தனம் திருத்திஞன் (2, 7) சீதை வாயமுதம் உண்டான் (2, 10) குரக்கரசு ஆவது அறிந்தோன் (3, 4) இலங்கை அழித்த பிரான் (3,4) சார்ங்கம் வளைய வலிக்கும் தடக்கை (5, 8) அரக்கியை மூக்கரிந்திட்ட குமரனர் (10, 4)

**பிற புராணச்செய்திகள் :**

பாற்கடலில் அனந்த சயனம் (பாவை 2, 3) திருவிக்கிரம அவதாரம் (3, 1) நாற்றத்துழாய் முடிநாரணன் (பாவை 10) உலகளந்தவன் (5, 5) திருமங்கை தங்கிய சீர்மார்வர் (8,4) அரவணையான் (10,6) அயன்முதலாய்த் தத்தநளிர்மா மலர்உந்தியான் (14, 9) & (8, 4) சங்குகொடு சக்கரம் ஏந்தும் தடக்கையன் பங்கயக்கண்ணன் (பாவை 14) ஆலிலையில் துயின்றவன் (26, 2) வங்கக் கடல் கடைந்த மாதவன் (பாவை 30) இரணியனை மாய்த்தவன் (8, 5)

**வழிபடு சொற்கள் :**

நாச்சியார் மனமுவந்து மதுசூதனனைப் பல சொற்களால் அருச்சிக்கிருர். அவை வருமாறு : மாயவன்

அரி, பற்பநாபன், நாராயணமூர்த்தி, கேசவன், மாதவன், வைகுந்தன், மணிவண்ணன், கண்ணன், கோபாலன், நெடுமால், சீர்கோவிந்தன், சக்கரக்கை வேங்கடவன், திருவிக்கிரமன், சிரீதரன், கோளரி, தாமோதரன், வாமனன், இருடிகேசன், அச்சுதன், கருளக்கொடியான் என்பன நாவில் நவின்று நலங்காணத்தக்கன.

**பதிகள் — ஆறுகள் :**

நாச்சியார் பாடல்களில் வரும் பதிகள் — ஆறுகள் பற்றித் தெரிதல் நலம். வடமதுரை, வேங்கடம், துவராபதி, திருமாலிருஞ்சோலை, கண்ணபுரம், திருவரங்கம், ஆய்ப்பாடி, பாண்டிவடம், குடந்தை விருந்தாவனம் முதலியன பதிகள். யமுனை ஆறு, திருமாலிருஞ்சோலை சிலம்பாறு, திருவரங்கக் காவிரி ஆகிய ஆறுகள் பேசப் படுப.

**முடிவுரை :**

தெலுங்கர், கன்னடியர், மலையாளர் ஆகிய திருவிட மக்கள் ஆண்டாள் மொழிகளைத் தம் தாய்மொழியில் அப்படியே எழுதிப்பாடி வருகின்றனர். சயாம் தாய்லாந்து நாட்டு மக்கள் தம்மொழி இயல்பிற்கு ஏற்பப் பாவைப் பாடல்களைப் பாடினாலும் அவை தமிழே! திருப்பாவையைக் கன்னடத்திலும், இந்தியிலும், போலந்து மொழியிலும் மொழிபெயர்த்திருக்கிறார்கள். திருப்பாவையைப் பிரஞ்சு மொழியில் பிலியோசா மொழிபெயர்த்தார். பாவைப் பாட்டில் இராமானுசர் மிகுந்த ஈடுபாடு காட்டினார். பெரியவாச்சான் பிள்ளையின் சீரிய உரை இப்பாடலிலுண்டு. ஆண்டாள் பாடல்களை

அரையர்களும் வைணவப் பெரியார்களும் ஆடிப்பாடியும் பொழிவு செய்தும் மார்கழி மாதத்தில் தவருது ஓதியும் புண்ணியப் பாடல்களின் புகழ்பரப்பிப்பயன் பெறுகிருர்கள்.

ஆண்டாள் என்ற ஒருவர் வாழ்ந்ததில்லே. அவர் கற்பனேப்பாத்திரம் என்ற கருத்தும் உண்டு. பாடல்களேப் பயில்வார், அது பிழை என்பதை நன்கு உணர்வர். அவர் கூற்றுக்குச் சான்றேதுமில்லே.

“ பைங்கமலத் தண்தெரியல் பட்டர்பிரான் கோதை
சொன்ன
சங்கத் தமிழ்மாலே முப்பதும் தப்பாமே ”

என்ற கடைக்காப்புச் செய்யுளேயும் பிற கடைக்காப்புச் செய்யுளேயும் காண்பார், கோதை என்று வழங்கிய ஆண்டாள், கற்பனேப்பாத்திரம் இல்லே என்று அறிவர்.

“ தென்புதுவை வேயர் பயந்த விளக்கான ” நாச்சியார் பாடல்கள் — தமிழ் நலம் பேணும் நற்றமிழ்க் கேடயம். பத்தி பண்ண உதவும் பச்சைப் பசுந்தமிழ்ப் பாசுரங்கள். ஓதியுணர்ந்தோர் என்றும் திருவருள் பெற்று இன்புறுவர்.

# தேவி புகழ்

**முன்னுரை :**

உலகம் ஆண் - பெண் என்று இருதிறமாக இயங்கி வருகிறது. மாந்தன் கட்வுளர்களைக் கண்டபோது தன் நிழலாகத் தெய்வங்களையும், ஆண் - பெண் என இரு வகையாக்கினன். நடைமுறையில் ஆணுக்குத் தலைமை என்றும் இருந்து வருவது போல, தெய்வ நிலையிலும் சிவபிரானுக்கே ஆதியில் தலைமை தந்து சத்தியைச் சார்புத் தெய்வமாகக் கருதினன். ஆகவே "இருக்கு" "யசுர்" ஆகிய வேதங்களில் சிவபிரானுக்குத் தலைமையுண்டு. நான்கு வேதங்களிலும் தேவிக்குத் தனிப்பெருமை தந்து பாராட்டவில்லை. ஆயினும் இருக்கு வேதத்தைச் சார்ந்த நூல்களில் இலக்குமி, துர்க்கை பற்றிய குறிப்புக்கள் வருகின்றன. முதலில் கேனோபநிடதம் சத்தியைப் பற்றிக் குறிக்கிறது. சுவேதாச்வரத உபநிடதம் சத்தியே படைக்கும் கடவுள் என்று தெளிவுறப் பேசும். இச்சா சத்தி - கிரியாசத்தி - ஞானசத்தி என மூன்ருக்கிச் சத்தி சிருட்டிக்கடவுள் எனச் சைவ சமயம் மொழியும்.

தமிழ் இலக்கியத்தைப் பொறுத்தமட்டில் சத்தி புகழ், தொல்காப்பியத்திலேயே காணப்படுகிறது. வெற்றியைத் தரும் தெய்வம் கொற்றவை என்று அது பேசும் (பொ. பு. சூ. .... 4) எயினர், வேட்டுவர் முதலானோர் வெற்றி வேண்டி, கொற்றவை என்ற காளியை வணங்கினர் எனச் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன. "நீல மேனி வாலிழை பாகத்தான்"

என ஐங்குறுநூறு கூறும். "ஊர்ந்தது ஏறே சேர்ந்தோள் உமையே" என அகநானூறு பேசும். "மாணிழை அரிவை காப்ப" என்பது கலித்தொகை.

"கங்கை முடிக்கணிந்த கண்ணுதலோன் பாகத்து
மங்கை உருவாய் மறையேத்த வேநின்ருய்"

என்று தெளிவாகவே சிலப்பதிகாரம் "தேவி புகழ்" பாடும். (வேட்டுவ வரி — பா. 3)

ஆகவே பழைய நூல்களில் உமை பற்றிய அல்லது கொற்றவை பற்றிய செய்திகள் வந்து விடுகின்றன.

இன்றும் குழந்தைகள் தம் தந்தையை நேரே நாடித் தேவையானவற்றைக் கேட்டுப் பெருமல் தாயைச் சார்ந்து வேண்டுவன குறித்துச் சொல்லித் தாய்மூலம் தந்தையிடம் பொருள்பெறும் இயல்பைப் பார்க்கிருேம். இது சமய நிலேயிலும் உண்டு. சைவ சமயத்தில் சிவபிரான் திருவருளேப் பெற எண்ணுவார் நேரே பெறுதலினும் அம்மையை வழிபட்டு அம்மை வழி எய்துதல் எளிது எனச் சாத்திரம் கூறும். திருஞான சம்பந்தர் இப்படி அருள் பெற்றவர். ஆதலின் எந்த ஒன்றையும் எளிதில் நாம் பெறத் தகும் குறுக்குவழி, அம்மையின் திருவிழி. தேவியின் திருப்பாதங்களே வணங்கி வாழ்த்தி வேண்டினுல், அம்மை எல்லாம் தருவாள்.

**சத்தி மதம் :**

சைவ சமயக் குரவர்கள் காலத்தில் அம்மையைத் தனியே ஏத்திப்பாடவில்லே. தேவார ஆசிரியர்கள்

காலத்திற்குப்பின் தனிச்சந்நதிகளும் தனிக்கோயில்களும் எழுந்தன.

சைவ சமயத்தின் ஆறுவகைப் பிரிவுகளில் "சாக்தேயம்" ஒன்று. இது தேவியை முழுமுதல் கடவுளாகக் கொண்டு வழிபடுவோர் கண்ட சமயம். இவர்களைச் சாக்தேயர் என்பர். மதுரையில் சொக்கரை விட மீனுட்சியம்மனுக்கே முதன்மை உண்டு.

**சத்தித் தலங்கள் :**

"மதுரை மீனுட்சி, காஞ்சி காமாட்சி, காசி விசாலாட்சி, திருவாரூர் கமலாட்சி" என்ற நாட்டுப்பாடல் அம்மை வதியும் திருத்தலங்களின் சிறப்பை ஓதும். தில்லைச் சிவகாமி, திருநெல்வேலி காந்திமதி, சங்கர நயினுர்கோவில் கோமதியம்மன், திருக்கடவூர் அபிராமி, சமயபுர மாரியம்மன், திருவேற்காடு கருமாரி, மாங்காடு காமாட்சி, தஞ்சை முத்துமாரியம்மன், பெரியபாளையம் பவானி ஆகிய தெய்வங்கள் அன்றும் இன்றும் என்றும் புகழ்தவழ விளங்குபவை.

**தேவியின் கூறு கொண்ட தெய்வங்கள் :**

தேவியின் இயல்புகளையும் சத்திகளையும் கொண்டு, கிராம மக்களைக் காப்பதாகக் கீழ்வரும் தெய்வங்கள் நினைக்கப்படுகின்றன. இவை அம்மையின் ஒரு கூறு என்றும் கருதுவர்.

கொற்றவை, காளி, பத்திரகாளி, செல்லம்மன், ஏகாததாள், கண்ணுத்தாள், பொன்னியம்மன்,

கன்னியம்மன், பிடாரியம்மன், காட்டேரி, மாரியம்மன், பேச்சியம்மன், முத்துமாரி, முத்தாலம்மன், மகமாயி, கன்னிகா பரமேசுவரி, திரெளபதை, எல்லம்மன், அங்காளம்மன் என்ற பெயர்கள் தேவியின் அம்சமான அம்மன்களுக்கு வழங்கக் கேட்கலாம். வடநாட்டில் வழங்கும் "சீதளா" என்ற தெய்வம் இத்தெய்வங்கட்கு நிகராகக் கருதத்தக்கது.

### தேவி புகழ்பாடும் நூல்கள் ;

சித்தர்களில் தலையாயவர் திருமூலர். அவரது திருமந்திரத்தில் நான்காவது தந்திரத்தில் தேவியை சக்கரவடிவில் அமைத்து வழிபடுவதைக் குறிக்கிருர். சத்தியின் பல வேறுபாடுகள் விளக்கப்படுகின்றன. தேவி தோத்திரமாக முதன் முதல் தமிழ்மொழியில் தோன்றிய நூல் கி.பி. 17ஆம் நூற்ருண்டில் குமரகுருபரர் செய்த மீனுட்சியம்மை பிள்ளைத்தமிழ், மீனுட்சியம்மை இரட்டை மணிமாலை, மீனுட்சியம்மை குறம் என்பன. அடுத்து கி. பி. 18இல் தோன்றிய அபிராமிப்பட்டரின் "அபிராமி அந்தாதி" புகழ் வாய்த்த தேவி தோத்திரமாகும். "குளத்தூர் அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்" இதே காலத்தில் தோன்றிய சிவஞான முனிவர் செய்த நூலாம்.

அன்னையின் அருட்கடலில் குளித்துக் களித்தவருள் கிருத்துவரான வீரமாமுனிவர் என வழங்கிய பெஸ்கியும் ஒருவர். அவர் "அடைக்கல நாயகி உலா" செய்தார். இசுலாம் புலவர் இபுராகிம், அம்மையின் அருளுக்கு ஆளாகித் திருமயிலை கற்பகவல்லி அந்தாதி செய்தார்

என்ருல் . அன்னையின் அருள் விளையாட்டிற்கு எல்லையுண்டா ?

மற்றும் திருவானைக்கா அகிலாண்டநாயகி அந்தாதி, ஷ அம்மை பிள்ளைத்தமிழ் ஆகிய இரு நூல்களை மகா வித்துவான் மீனுட்சி சுந்தரம்பிள்ளை செய்தார். திருவொற்றியூர் வடிவுடையம்மை பதிற்றுப் பத்தந்தாதியைச் சபாபதி முதலியாரும்,வடிவுடையம்மன் பிள்ளைத்தமிழை நடராசக்கவியும், சிவகாமி பிள்ளைத்தமிழை மு. ரா. அருணுசலக்கவிராயரும், கண்ணுடையம்மன் பள்ளு என்பதை முத்துக்குட்டிப் புலவர் என்பவரும், காந்திமதி பிள்ளைத்தமிழை அழகிய சொக்கநாதபிள்ளையும் பாடியுள்ளனர். இவற்றில் சில நன்கு வழங்காவிடினும், பல புகழ்வாய்ந்த நூல்கள். என்றறிக.

வடமொழியில் சங்கரர் செய்த "கனக தாரா", "சௌந்தர லகரி" என்பன புகழ்பூத்த தேவி தோத்திரங்களாம். 'தேவி பாகவதம்' என்ற புராணம் அன்னையின் மேன்மைகளைத் தனித்துப் பேசும் புராணமாம்.

## அபிராமிபட்டரும் தேவியும் :

அபிராமிபட்டர் தென்மொழி வடமொழியில் தேர்ந்தவர். அன்னைபால் அளவில்லா பத்தியும் பூண்டவர். அவரது 101 பாடல்களும் வைரங்கள். படிப்பார் மனத்தை இறைவிபால் ஈர்த்து பிறவிக்கடலை நீந்தச் செய்பவை. அரிய பாடல்கள் சில காண்போம்.

**அன்னையின் தலைமை :**

அன்னையின் திருப்பாதங்களை நான்கு வேதங்களும் தேடி அடைகின்றன. மறைப்பொருளாகத் தேவி உள்ளாள்.

"மறைநான் கினுக்கும் தானந்தமான சரணுரவிந்தம்"
(பா — 11)

"எழுதா மறையின் ஒன்றும் பொருள்" (பா — 10)

தேவி,

"புவனம் பதினான்கையும் பூத்தவண்ணம் காத்தவள்
கறைகண்டனுக்கு மூத்தவள்" (பா — 13)

என்பதால் தேவியின் தலைமை தெரியவரும்.

"பந்திப்பவர் அழியாப் பரமானந்தம்"
எய்த வழி செய்பவள்.

"………… கம லாலயனும்
மதியுறு வேணி மகிழ்நனும் மாலும் வணங்கும்"
தெய்வம் (பா — 7)

"இவளே கடவுளர் யாவர்க்கும் மேலை இறைவியுமாம்"
(பா — 44) என்பார்.

**இயல்பு :**

அன்னையின் இயல்புகள் யாவை? பாசத்தொடர் நீக்குபவள் (பா — 8) அழியா முத்தி ஆனந்தம் தருபவள். (பா. 10) ஐம்பெரும் பூதங்களாக விளங்கி

அருள்பவள். (பா. 11) "ஒன்றே பலவுருவே அருவே" யாக உள்ளவள் (பா. 30) வலியவந்து பத்தரை ஆட்கொள்பவள் (பா. 32)

**வழிபட்டால் வரும் பயன்கள் :**

"அல்லலெல்லாம் தீர்த்து அருள்வாள்" (பா. 85) தொழும் அடியாரைத் தொழுவார்க்கு இத்திரர் பதவி தருவாள் (பா 91) நெஞ்சில் பதித்து வணங்குவார், பிறவி அறுவர் (பா. 48) வணங்கியவர்கள் இவ்வுலகில் அரசர் போல செல்வமுடன் வாழ்வர், விண்ணில் தேவராய்த் திகழ்வர். (பா. 15) காலன் வரும்போது காப்பாள் (பா. 18) "நெஞ்சத்து அழுக்கையெல்லாம் போக்கி அருட்புனலாள் துடைப்பாள்" (பா. 27) மற்றும் தேவி,

"தனந்தரும் கல்வி தரும்ஒரு நாளும் தளர்வறியா
மனந்தரும் தெய்வ வடிவும் தரும்நெஞ்சில் வஞ்சமில்லா
இனந்தரும் நல்லன எல்லாந் தரும்அன்பர் என்பவர்க்கே
கனந்தரும் பூங்குழ லாள்அபி ராமி கடைக்கண்களே"
(பா. 69)

ஆகவே, பட்டர் "பணியேன் ஒருவரை நின்பத்மபாதம் பணிந்த பின்னே" (பா. 24) என்றார்.

நாமெல்லாம் தேவியிடம் என்ன வேண்டிக் கொள்ளுதல் வேண்டுமோ அவைகளை ஒரு இடத்தில் தொகுத்து எழுதுகிறார். நமது பூசையில் இங்ஙனம் வேண்டிக் கொண்டால் அவை நமக்குக் கிடைக்கும். நாம் வாழ்ந்ததில் ஒரு பொருளும் புகழுங்கூட கிடைத்தல் உறுதி.

" கலையாத கல்வியும் குறையாத வயதுமோர்
கபடுவா ராத நட்பும்
கன்றாத வளமையும் குன்றாத இளமையும்
கழுபிணி யிலாத உடலும்
சலியாத மனமும்அன் பகலாத மனைவியும்
தவறாத சந்தானமும்
தாழாத கீர்த்தியும் மாறாத வார்த்தையும்
தடைகள்வா ராத கொடையும்
தொலையாத நிதியமும் கோணாத கோலும்
ஒருதுன்பம் இல்லாத வாழ்வும்
துய்யநின் பாதத்தில் அன்பும்உத விப்பெரிய
தொண்டரொடு கூட்டு கண்டாய்
அலையாழி அறிதுயிலு மாயனது தங்கையே
ஆதிகட வூரின் வாழ்வே
அமுதீசர் ஒருபாகம் அகலாத சுகபாணி
அருள்வாமி அபிரா மியே ".

என்பது அவரது வேண்டுதல். ( அபிராமியம்மை பதிகம் (பா. 1 ). இவையே நமது வேண்டுதலுமாம்.

" அன்னே உலகுக் கபிராமி என்னும் அருமருந்தே
என்னே இனியுன்னை யான்மற வாமல்நின்
றேத்துவனே ".

( பா. 25 ) என வணங்கி வாழ்வோம்.

# பழநிமலைப் பயண வரலாறு

**நகரத்தாரும் முருகனும் :**

முருகா என்று ஒருதரம் சொன்னால் முக்காலும் வினைகள் தீரும். சேயோன் என்றும், சேய் என்றும், செட்டிக் குமரன் என்றும், முருகு என்றும், பழனிஆண்டி என்றும், பலபடி ஏத்தப்படும் இத்தெய்வம் பற்றித் தொல்காப்பியம் முதல், சங்க இலக்கியம், இடைக்கால இலக்கியம், இக்காலப் படப்பாடல்கள் வரை புகழ்ந்து பாடப்பார்க்கலாம். சுருங்கச்சொன்னால் மக்கள்குலம் தோன்றிய நாள் தொட்டுத் தென்னவர் நெஞ்சில் குடியேறி குன்றேறி மன்றேறி நிற்கும் பழகு தமிழ்த்தெய்வம் இக்குமர வேளேயாம்.

தொல்காப்பியம், புறநானூறு, அகநானூறு, பரிபாடல், சிலப்பதிகாரம் ஆகிய எல்லா நூல்களிலும் முருகனைப் பற்றிக் கேட்கிறோம். குறிப்பாக நகரத்தார் மக்கள் கொண்டாடும் தெய்வங்களில், இம்மலையாண்டி முதன்மையானவர். நகரத்தார் மதத்தால் சைவர். வணங்கும் முழுமுதல் கடவுள் சிவபெருமானே. குலதெய்வம், மரகத விநாயகரே; வழிபடு தெய்வம் வள்ளி மணாளனேயாம்! “செட்டி கப்பலுக்குச்செந்தூரான் துணை என்பது காண்க. பிற குலத்தில் ‘செட்டி’ என்ற பெயர் இல்லை. நகரத்தாரில்தான் “செட்டியப்பன்” செட்டியாத்தாள் (இது சிட்டியாத்தாள் என மருவியது) என்ற பெயர்கள் உண்டு.

வேறு எத்தெய்வப் பெயரையும் விட முருகன் பெயர்களே நகரத்தாரில் மிகுதி. அழகப்பன், ஆறுமுகம்,

பழனியப்பன், சண்முகம், குமரப்பன், வேலாயுதம், முத்தையா, முருகப்பன், வள்ளியப்பன், சுப்பிரமணியன், கதிரேசன், குருநாதன், ஞானபண்டிதன், கந்தசாமி, சரவணன், செட்டியப்பன், இப்படி ஆண்கள் பெயர் இருக்கும். முருகன் தொடர்பான மகளிர் பெயரும் உண்டு. வள்ளியம்மை, தெய்வானை இப்படிப் பல இருக்கும்.

நகரத்தார்கள் முதலில் நவமணி வியாபாரம் செய்தவர்கள். அதை விடுத்துப் பிற வியாபாரப் பொருள்களை - அதாவது அரிசி, உப்பு முதலான நவதானியம் விற்கத் தொடங்கிய காலம்-300 ஆண்டுக்கு முன்னராகலாம். அப்பொழுது முதல் இவர்கள் வியாபாரம் குறித்து வெளியூர் சென்ற முதல் இடம் பழநிமலை. இவ்வணிகத்தில் நல்ல பலன் எய்தியதால், வியாபாரநிமித்தம் பின்னர் வேறு எந்த ஊர் சென்றாலும் பழநியாண்டவரைக் குறிக்கும் வேல்வணக்கமும், மலைமீது முருகனை அமைப்பதும் தம்குல வழிபாடாக்கினர். ஆகவேதான் பர்மா, மலேசியா, சிங்கப்பூர், பினாங்கு, பெர்லிசு, அலோசுடார், சுங்குரும்பை, கோலாலம்பூர், தைப்பிங், சிரம்பான், இரங்கூன், கொழும்பு, கதிர்காமம், சைகோன் முதலான வெளிநாட்டு இடங்களிலும் முருகனுக்கே கோயில் எழுப்பித் தேர்த்திருவிழாச் செய்து காவடி செலுத்தி, பஞ்சாமிருத அபிடேகம் செய்வித்து, குடும்பம் தோறும் பிள்ளைகட்கு முடிவைத்து, ஆண்டவன் அருளும், பொருளும் எய்தி, தான தர்மம் செய்து, தோலாப் புகழும் தொலையாச் செல்வமும் எய்தி நல்வாழ்வு வாழ்ந்தனர். நகரத்தார் குருதியில் தெய்வப்பற்றும், நடத்தையில் நாணயமும், சொல்லில்

உண்மையும் இன்றும் மின்னிப் பொலிவது - இந்தக் காரணத்தால் தான். பொழுதெல்லாம் பொருள் ஈட்டிக் காலையிலும், மாலையிலும், கதிர்வேலைக் கை தொழுவர். இப்படிப் பழநிப்பயணம், அருளும் பொருளும் தந்ததால் அந்த நம்பிக்கை கடல் கடந்த வணிகத்திலும் பற்றிப் படர்ந்து பரவியது.

சங்க இலக்கியங்களில் திருச்செந்தில் பற்றிக் குறிப்புண்டு. பழநி என்பது அக்காலத்தில் பொதினி எனவும் ஆயக்குடி எனவும் வழங்கியது. ஆவியர் குடியினர் பழநியை ஆண்டனர். ஆயினும் பழநிமலை என்ற பெயரோ பழநியாண்டவர் பற்றியோ குறிப்பில்லை. ஆவினன்குடி என்ற பெயரே உண்டு. திருமுருகாற்றுப் படையில் முதலில் ஆவினன்குடியில் முருகன் உறைவதைப்பற்றி நக்கீரர் குறித்தார். அவரும் பழநிப்பதி பற்றியோ பழநியாண்டவர் பற்றியோ சொல்லவில்லை. அருணகிரியார்தான் முதலில் இவ்வூரில் இத்தெய்வத்தைக் குறிக்கிறுர் போலும்!

ஆயினும், சங்க காலத்திலேயே பொதினி-ஆவினன்குடி, முருகன் பற்றிய செய்திகள் வந்துவிடுகின்றன.

இப்பழம் பதியில் முருகன்-பழநியாண்டவன் ஆனது எப்போது? போகர்காலத்தில் நகரத்தார் பழநியாண்டியை வணங்கியது 300 ஆண்டுகட்கு முன்னர் என்பதற்குச் செப்பேட்டுச் சான்று உண்டு. அப்படியாளுல் அதற்கு முன்னர் சுமார் 300 ஆண்டாவது ஆகியிருக்க வேண்டும். கச்சியப்பரும் பழநியை "ஆவினன்குடி" என்றே குறிக்கிறுர். ஆகவே 600 ஆண்டுகட்கு முன் அதாவது

கி.பி.14 ஆவது நூற்றுண்டு முதல் இத்தெய்வமும் பதியும் புகழ் கொண்டிருக்கலாம். சைவநாயன்மார்கள் இக்கோவிலேப் பற்றிச் சொல்லவில்லே. ஆகவே சுமார் 14-ஆம் நூற்றுண்டின் இறுதியில் இது வரந்தரும் பதியாய் வளர்ந்திருக்கலாம்.

இப்பதிக்கு 300 ஆண்டுக்குமுன்னர் நெற்குப்பையில் இருந்து குப்பாய்ப்பிச்சான் செட்டியார் வகையரு முதலில் சென்றிருக்கிருர்கள். உப்பு வணிகம் செய்து ஆதாயத்தில் சுவாமிக்குப் பங்கு வைத்து அதைக் கொண்டு தான தர்மம் செய்திருக்கிருர்கள். அடுத்து, கண்டனூர் குட்டையன் செட்டி வகையரு காவடி எடுத்து வந்தபோது, ஆண்டவர் இவ்வகையினருக்கு அருள் ஆடியதால் இவர்கள் அடுத்த சிறப்புப் பெற்றனர். காரைக்குடி வைரவன் கோயில் வெள்ளேக் குமரப்பையா வகையினர் அவர் முன்னேர் வேலப்ப செட்டி வைரவன் - அன்னதானமடத்துக் கல் திருப்பணியில் ஈடுபாடு காட்டி இறைவனே நேரில் கண்டபடியால் இவர்கட்டு அடுத்த சிறப்பும் நடந்தது. இது குறித்து கி.பி. 1788இல் (கலி — 4889) தோன்றிய செப்பேடு விரிவாக விளக்கமாக நன்னர் காட்டுகிறது. காரைக்குடி கலிங்கப்பையா வகையரு நல்லான் செட்டி வகையரு இவர்கள் அரண்மனேப் பொங்கலாருக்கு உறுதுணேயாய் நின்று உதவியவர்கள். தேவகோட்டை தாம்பிரவேல் நெற்குப்பை வேல் பற்றிய குறிப்புக்களும் செப்பேட்டில் உண்டு. ஆக இவ்வழிநடைப் பயணிகளின் தெய்வப்பணி எவ்வகையில் பார்த்தாலும் 200 ஆண்டுக்குக் குறையாமலும், 300 ஆண்டுகட்கு முற்பட்டதாகவும் உள்ளதை அறியலாம். இப்பயணமும் வழிபாடும்

இம்மரபினருக்குக் கணக்கில்லா நன்மைகளையும் மன அமைதியையும் தந்து வந்திருக்கிறது. நோய் நீக்கம், பிள்ளைப் பேறு, வணிக வளர்ச்சி, இன்ப வாழ்க்கை இப்படி எத்துணை எத்துணை நன்மைகள்! பழநிக்கு வழிநடந்தோர் சொல்லில் அடங்காச் சுகம் பெற்றனர்; பெறுகின்றனர்.

**அரண்மனைப் பொங்கல் வரலாறு :**

வேலப்ப செட்டி வயிரவன், பழனியாண்டவரைக் கண்ணுக்குக் கண்ணாய் நேரில் கண்டவர். வயிரவன் செட்டியாரின் தந்தை பெயர், வேலப்ப செட்டி என இருப்பதால் அந்த மரபினர் மிகப்பல ஆண்டுகட்கு முன்னர் பழநியாண்டவர் அடிமையாய் இருந்து பழநி போய் வணிகம் செய்தவர்கள் என்பது விளங்கும். பலகாலம் பழநியில் தங்கி உப்பு வியாபாரம் முடிந்ததும் பண்டாரம் வீட்டில் தங்கி அந்தணர், சாதுக்கள், பரதேசி ஆண்டி முதலியவர்கட்கு உணவிட்டு அன்னதானப் பூசை செய்து வந்திருக்கிறார்.

செப்பேட்டின்படி கி.பி. 1788-இல் தெய்வநாயகப் பண்டாரத்து மனையில் 6 கால் கூரைக்கூடத்தை 78 கால் மண்டபமாகக் கல் திருப்பணி செய்தபோது, வேலப்ப செட்டி வயிரவன் வசம் ஷெ பணி செய்து வைக்குமாறு பொறுப்பு ஒப்படைக்கப்பட்டது. வயிரவன் செட்டிமிக்க பக்தியோடும் அக்கறையோடும் பொழுதெல்லாம் திருப்பணியில் கழித்தார்.

கற்பணிக்காக வானம் வெட்டி மணல் கொட்டி மொங்கான் போட்டுக்கல் நட நாள் குறித்து வைத்திருந்த போது, கற்கால் ஊன்ற இருந்த முதல்நாள் இரவு

வைரவன் முன்னிலையில் பழநியாண்டவரே தோன்றி நிலம் உறுதியாகவில்லை-மொங்கான் போட்டது போதாது எனச் சொல்ல, "சுவாமி இனி என்ன செய்வது? நாளை நாள் வைத்திருக்கிறதே என்ன செய்வேன்" என மயங்கினர். ஆண்டவன், "நீ மனக்கவலையை விடு. வானத்தில் நிலமட்டம் வரை மணலைக்கொட்டி 12 குடம் நீர்வார்த்து மொங்கான் மரத்தையும் அவ்விடத்தில் வை" என அருள் மொழிந்தார். வைரவன் செட்டி அப்படியே செய்து வைத்தார். அன்று இரவு செட்டியாருக்கு மொங்கான் போடும் ஒலி கேட்டது. இது பழநியப்பன் அருள் என நினைந்து யாவர்க்கும் நடந்ததைக் கூறினர். ஆண்டவரே அடியாரின் (வயிரவனின்) பத்தியையும் பணியின் அக்கறையையும் கண்டு மனமகிழ்ந்து வேலையாளாய்ப் பணியாற்றியிருக்கிறர். 12 முகத்திற்கும் 12 குடம் நீர் கேட்டார். 12 ஆளாய்த் தொண்டார்க்கும் தொண்டராக வந்து பணியாற்றிய இச்சிறப்புப்பற்றிச் செப்பேடு விளக்கமாகச்சொல்லும். இதற்காகக் காரைக்குடி வேலப்ப செட்டி வைரவனுக்கு ஷ்டி கற்பணி மண்டபத்தில் சிறப்பு மரியாதை உண்டு என அதில் எழுதியுள்ளனர்.

அதற்கு மேல் வைரவன் செட்டி வகையருக்கள் அத்தலத்தில் அந்தணருக்கும் சாதுக்கட்கும் உணவிட்டு வந்த தர்மத்தை மேலும் தொடர்ந்து புதிய மண்டபத்தில் நடத்திவர நகரத்தார் அனுமதித்து அதற்காக நகரப் பொதுவில் ஆண்டு ஒன்றுக்கு 21 பொன் கொடுக்க வேண்டும் எனவும் பாணக்கம் கரைத்துச் சுருட்டும் வைரவன் வைக்கிறது எனவும் ஷ்டி செப்பேடு செப்புகிறது. ஆகவே இவ்விதம் அடியார்கட்கு உணவு வழங்கும்

பொறுப்பு 200 ஆண்டாக இந்த வகையருவிற்கு இருந்திருக்கிறது எனத் தெரிகிறது.

வேலப்ப செட்டி பேரனும் வயிரவன் செட்டி மகனுமான வெள்ளைக் குமரப்ப செட்டி, தன் காலத்திலும் இப்பணிகளைச் செவ்வனே செய்தார். ஷியாரும் பொதிமாட்டில் உப்புஏற்றி,காரைக்குடிக்கள்ளர் அம்பலம் வகையருக்களின் துணையோடு பழநி சென்று வியாபாரம் செய்து வந்ததோடு அன்னதான மடத்தில் உணவிடும் பொறுப்பையும் தொடர்ந்து நடத்தி வந்திருக்கிறார். இவர்கள் காலத்தில்தான் பழநி வண்டிப்பேட்டை அன்னதானமடத்துடன் சேர்க்கப்பட்டது.

பழநி செமீன்தாரின் மனைவியாருக்கு வயிற்றுவலி பலகாலம் இருந்தது. சமீன்தாரின் வேலையாள் பேரில் சாமிவந்து வெள்ளைக் குமரப்ப செட்டியார் மூலம் இந்நோய் தீரும் எனச் சொல்ல, சமீந்தார் ஆள் அனுப்பி அழைத்துவருமாறு கூற, செட்டியார் தம் இருப்பிடம் வருமாறு கூற அதுபோல் சமீந்தார் தம் இல்லக் கிழத்தியாருடன் வந்து வணங்கி செய்தி தெரிவித்தார். ஆண்டவரை, குமரப்பையா வேண்ட, அவர் நேரில் தோன்றி செட்டியாருக்கு அருள் தர, அவர் திருநீறு அளித்து நோய் தீர்த்தார். இதற்கு மகிழ்ந்து சமீந்தார் "நான் என்ன மரியாதை செய்ய வேண்டும்" எனக் கேட்டார். வெள்ளைக்குமரப்பையாவண்டிப்பேட்டையைத் தரும சாசனமாக எங்கட்குத் தந்து, அன்னதான மடத்து இடம் விரிய உத்தரவு தரவேணும் எனக்கேட்க, சமீன்தார் அப்படியே செய்து கொடுத்தார். மேலும் அன்னதான தருமம் தழைக்க 7000 ரூபாயும் கொடுத்தார்.

அதற்கு மேல் தைப்பூசத்தையொட்டி முன் 5 நாட்களுக்கும் அரண்மனையில் இருந்து காய், கறி, அரிசி முதலிய பொங்கற்பொருட்களைவழங்கி "அரண்மனைப்பொங்கலார்" என்ற சிறப்புப் பட்டத்தையும் வழங்கினர். அது முதல் வெள்ளைக் குமரப்பையா வகையருவிற்கு "அரண்மனைப் பொங்கல்" என்ற சிறப்பக் கிடைத்தது.

ஒருமுறை வெள்ளைக் குமரப்பையா பழநிக்கு வழிநடைப்பயணம் செய்து மகேசுவரபூசை (அன்னதானம்) யைச் செம்மடைப்பட்டியில் செய்தபோது கன்னிவாடி செமீன்தார் வந்து பார்த்தார். ஐயாவின் பத்தி அருள், பணி முதலியனவற்றைக்கண்டு, தமக்தொரு ஆண் சந்ததி வேண்டும் எனக் குமரப்பையாவை வேண்ட, அவரும் ஆண்டவனின் திருநீறு அளித்து கிடைக்கும் என நல்வாக்குக் கொடுத்தார். அந்தப்படி சமீன்தார் ஆண்மகவு எய்தி மகிழ்ந்தார். அதனுல் இன்றும் ரெட்டியார் சத்திரத்தில், கன்னிவாடி சமீன் வகையரு அரண்மனைப் பொங்கலாரை மேள தாளத்தோடு வரவேறபதைக் காணலாம்.

வெள்ளைக் குமரப்பையா சிறந்த பத்தராகவும், அறம் வளர்ப்பவராகவும் அன்னதானத்தை முதல் அறமாக நடத்தியவராகவும்தவசிபோலவேஇருந்ததாலும் யாவரும் பத்தி பண்ணி ஒழுகி வந்தனர். அவர்களும் தமது இறுதி நாளில் தம்மை எரிக்காமல் சமாதியில் வைக்க வேண்டும் என விரும்பிச் சொல்லி வைத்திருந் தார்கள். அவர்கள் காலமானபோது காரைக்குடியில் சீனிப்பண்டாரத்திடம் வாங்கிய இடத்தில் சமாதிவைத்து

இன்றும் பழநி செல்லும் முன் அச்சமாதியில் வழிபாடு இயற்றி, பின்னரே புறப்படும் வழக்கம் நடந்துவருகிறது.

பழநியில் அந்தணருக்கும் சாதுக்களுக்கும் சோறு படைக்கும் அறத்தை முதலில் தொடங்கியவர்களும், கல்திருப்பணியில் களைக்காமல் சளைக்காமல் தொண்டு ஆற்றியவர்களும் சமீன்தாரின் பொங்கல் பரிசைப்பெற்று அரண்மனைப் பொங்கலார் எனச் சிறப்புப் பெற்றவருமான இவ்வகுப்பாரே ஆதி முதல் பழநி வழிநடைப்பயணத்தில் அன்னதான மகேசுவர பூசை நடத்தி வந்திருக்கிறார்கள். அது இன்றும் தொடர்கிறது. இன்றளவும் வழியில் சோறு படைக்கும் வழக்கம் இவ்வகுப்பாருக்கிருந்து வருகிறது. கண்டனூர், நெற்குப்பை நகரத்தார்கள் உட்பட அண்மைக்காலம் வரை, இந்தத் தர்மத்திற்காக ஆண்டுக்கு ரூபாய் 200 வரை அன்னதான மடத்தில் சோறு படைப்பதற்காக வழங்கி வந்திருக்கின்றனர். செப்பேட்டுப்படி முன்னர் 21 பொன்கொடுத்திருக்கிறார்கள். இன்று ஏனோ அது தடைப்பட்டிருப்பதாகச் சொல்லப் படுகிறது.

இன்று கால நிலைகளை அனுசரித்து சில மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. குமரப்பையா வகையரு தமது செலவில் நடத்திய அன்னதான தர்மம் இப்பொழுது நகரப் பொதுவில் செய்யப்படுகிறது.

வழியில் அன்னதானம் செய்வது, வயிரவன் செட்டியார் காலத்தில் இல்லை. அன்னதான மடத்தில் மட்டுமே அந்த தர்மம் இருந்தது, நாளடைவில் வெள்ளைக்குமரப்பையா காலத்தில் வழி நடக்கையிலும் செய்கிற அளவு வளர்ந்தது. பின்னர் மாற்றங்கள்

நிகழ்ந்தன. இன்றும் ஷெ வெள்ளைக்குமரப்பையா வகையருவில் வைரவன் கோயில் பெரிய வகுப்பு குமரப்பன் என்ற முத்தையா செட்டியார் அரண்மனைப் பொங்கல் என்ற சிறப்புப் பெயரில் ஷெ தர்மத்தை நடத்தி வருகிறார்கள். இன்று அவர்களை "பழநிஐயா" என்றே அன்பொழுக அழைத்துப் பாராட்டிக் கொண்டாடி வருகிறார்கள். இவர்களின் பணிக்கு நல்லவகையில் நல்லான் செட்டியார் வகையரு திருத்தொண்டு செய்கிறார்கள். காணிக்கை வசூலித்தல், கணக்கு வைத்திருத்தல் ஆகிய பணி இவர்களுடையதே! கலிங்கப்பையா வகையருவும் பல காலம் பழநிப்பதி சென்று வருகிறவர்கள். இவர்களின் முன்னோர் சத்தரப்பட்டிக்கருகில் கலிங்கப்பையா ஊருண்ணி என ஒன்று கட்டியிருப்பதை யாவரும் அறிவர்.

பன்னெடுங்காலமாய்ப் பழநியாண்டவனுக்கு நகரப் பெருமக்கள் வழிவழியாய்க்காவடி செலுத்தி, அன்னதானம் செய்து சீரும் சிறப்பும் பெற்று வருவது கண்கூடு.

**விரத முறைகளும் வழிநடையூர் நிகழ்ச்சிகளும்:**

பழநிப்பயணம் ஏழுநாள் நடக்கும். பழநியில் அன்னதான மடத்தில் ஏழுநாள் பூசை நடக்கும். இப்பயணத்தில் கலந்து கொள்பவர்கள் சில விரதங்களைக் கடைப்பிடித்தல் வேண்டும். புறப்படுமுன் அவர்கள் தங்கள் வீட்டில் பயறு பச்சை வறுக்கவோ திரிக்கவோ கூடாது. நெல் அவிக்கக்கூடாது. இதன் காரணம் என்ன? இப்படிச் செய்தால் பயிர்களின் உயிர்ச்சத்தும் பசையும் அறவே அற்றுவிடும். இதுவும் உயிர்க் கொலைக்கு நிகர். சாமி காரியத்தில் ஈடுபடுபவர்கள்

உயிர்க் கொலை செய்தல் கூடாது. உயிர்க் கொலையும் புலால் உணவும் தெய்வக் காட்சியைத் தடுத்துவிடும் இரும்புத்திரைகள் என்று உணர்க. பயணிகள் காலில் செருப்பு அணியக் கூடாது. குடை பிடிக்கக் கூடாது. புலால் உண்ணக்கூடாது. துக்க காரியங்கட்குப் போகக் கூடாது. தீட்டுப்பட்ட வீட்டில் கலந்து கொள்ளக் கூடாது. புதிய படுக்கை பயன்படுத்த வேண்டும். ஓராடையும் ஒரு மனமும் கொண்டு திருமுருகன் திருப்புகழ் பாடவேண்டும். வழியில் காவடியை மாற்ற நேர்ந்தால் பண்டாரத்திடம் கொடுக்கலாம். ஒவ்வொரு முறையும் காவடியைக் கீழே வைத்து எடுக்கும்போது நீராடிய பின்னரே தூக்க வேண்டும்.

**முதல் நாள்:**

பழநி அன்னதானமடத்தில் இருந்து தைப்பூசத்திற்கு 21 நாள் முன்னதாகப் பண்டாரத்து ஐயாவிடமிருந்து நகரத்தார்கட்கு — காரைக்குடியைப் பொறுத்தமட்டில் வைரவன் கோயில் வெள்ளைச் குமரப்பையா வழியினருக்குத் திருமுகம் வரும். அவர்கள் நகரத்தார்கட்கும் பிறருக்கும் சொல்லிப் பயண ஏற்பாடு செய்வர். சுமார் 110 மைலை 7 நாளில் கடக்கவேண்டும்

புறப்படும் நாளில் குமரப்பையா வீட்டில் அதிகாலையில் விநாயகப்பானை வைத்துப் பொங்கலிடுவர். மதியம் வெள்ளைக்குமரப்பையா சமாதிக்குச் சென்று அபிடேக ஆராதனை செய்து வழிபட்ட பின்னர் வீட்டுக்கு வந்து தண்டாயுதபாணி படத்திற்குப் பண்டாரம் பள்ளயம் படைப்புச் செய்து "அரகரா"ச்சொல்லி ஏழை எளியவர்க்குச் சோறிட்டுப் பூசை செய்வர்.

இரவில் கொப்புடையம்மன் கோவிலில் காவடி கட்டிப் பொங்கல்வைத்து அருள்வரச் செய்து புறப்படுவர். ஷி கோவிலில் உள்ள மகிழ மரத்தடியில் நல்லாஞ்செட்டி வகையரு குமரப்பையா வகையருவிடம் கணக்கு கைப்பெட்டி கொடுப்பர். குமரப்பையா வழியினர் காவடியை அழைத்துச் செல்வர். பின்னர் சிவன்செயல் மடத்தில் பயணம் சொல்லிக்கொண்டு குன்றக்குடி அன்னதான மடத்தில் வந்து தங்குவர். இம்மடத்தில் தான் கண்டனூர் சாமியாடிச் செட்டியார் வகையருவும் வந்து தங்குவர்.

**இரண்டாவது நாள் :**

பொழுதுபுலர் காலையில் குன்றக்குடி அன்னதானத்து மடத்தின் வேல் அங்கியை வண்டியில் ஏற்றி வேலைப் பண்டாரம் ஏற்க ஷி மடத்துத் தண்டாயுதபாணி முன்னிலையில் திருநீறு வழங்கிப் புறப்படுவர். பின்னர் பத்தர்களும் காவடியும் முறையே மயிலாடுபாறை, பிள்ளையார்பட்டி கற்பக விநாயகர், வைரவன்பட்டி வைரவர் சந்நிதிகளில் அரகராச் சொல்லி, எச்சரிக்கை முழங்கி, கட்டியம் கூறி, திருநீறு பெற்றுச் செல்வர். வயிரவன்பட்டி விலக்குப் பாதையில் கண்டவராயன் பட்டிக்குச் சென்று பிள்ளையார் கோவிலில் காவடிகளை இறக்குவர். அவ்வூர் நகரத்தார்களும், நாட்டார்களும் வந்து காவடிய்யை வரவேற்பர். காவடிக்கு தீபாராதனை காவடிப்பூசை செய்வர். இங்கு நகரத்தாரின் வழிபாட்டியலை நினைக்க வேண்டும். வேல், காவடி முதலிய சின்னங்களையும் முருகனாகவே கருதி வணங்கிய சீரிய பாவனையை எண்ணி மகிழலாம்.

மாலையில் மருதுபட்டித் தோப்பில் காவடிக் கூடத்தில் காவடி தங்கும். அங்கு வேலுக்கு அபிடேக ஆராதனை நடக்கும். மகேசுவர பூசை நிகழும். இரவே புறப்பட்டுச் சிங்கம்புணரி சேவுகப்பெருமாள் கோவிலில் தங்குவர்.

**மூன்றும் நாள் ;**

காலையில் பாண்டக்குடி வழியாகப் புறப்பட்டு மணப்பச்சேரி பிள்ளையார் கோவிலில் நண்பகல் வந்து தங்கி காவடிக்கு நிவேதனம் செய்வர். மாலை, சமுத்திராபட்டி வந்து இரவு நகர மடத்தில் தங்குவர். அங்கு முன்போல் பூசைகள் நிகழும்.

**நான்காம் நாள் :**

காலை 6 மணிக்கு நத்தம் பசனை மடத்தில் காவடி இறக்கி தீபம் பார்த்து, பானக பூசை செய்வர். அன்று மதியம் உப்பாற்றுத் தோப்பில் காவடிக்கு நிவேதனம் நடக்கும். இரவே பயணம் மீண்டும் தொடங்கும்.

**ஐந்தாவது நாள் :**

காலை 5 மணிக்குத் திண்டுக்கல் அபிராமி அம்மனை வணங்கி மதியம் ரெட்டியார் சத்திரத்தில் காவடி நிவேதனம் செய்து செம்மடைப்பட்டியில் நகரத்தார் பிள்ளையார் கோவிலில் மதியம் தங்குவர். இங்கு இரவு ஆண்டவனை ஊஞ்சலில் வைத்து தீப தூபங்காட்டி வணங்குவர். வழிநடைக் களைப்பு நீங்கும் வகையில் முழுஓய்வு கொள்ளும் நிலையில் ஊஞ்சல் வழிபாடிருக்கும்.

**ஆறுவது நாள் :**

காலையில்ஒட்டன்சத்திரம்வழியாக, குழந்தைவேலன் சந்நதியை அடைந்து காவடிக்கு நிவேதனம் செய்து மாலையில் சத்திரப்பட்டிச்சாலையில் அடையாள வேலையும் பழநி மலையையும் கண்டு வணங்கி, இரவு சத்திராபட்டி மலைக்கவுண்டர் தோட்டத்தில் பூசை செய்வர். (முன்னர் கலிங்கப்பையா ஊரணிக்கரையில் தங்கினர்.)

**ஏழாவது நாள் :**

காலையில் ஆயக்குடி பெருமாள் கோவிலில் தங்கி, பின் இடும்பன் குளம் வந்து இடும்பரை வணங்கி நண்பகல் அங்குத் தங்குவர். மேலைச்சிவபுரியில் இருந்து வேலோடு வருபவர்கள் — நெற்குப்பையிலிருந்து காவடியுடன் வருபவர்கள் இவர்களெல்லாம் இந்த இடத்தில்தான் சந்தித்துக் கொள்வர். சாமியாடிச் செட்டியார் முன்னரே புறப்பட்டு மலையின் பெருஞ்சுற்றில் (கிரிபிரகாரத்தில்) இருப்பார். இவர்களெல்லாம் பெருஞ்சுற்றில் ஷி செட்டியாரைச் சந்திப்பர்.

அன்று மாலை அன்னதான மடத்தில் உள்ளூரில் வியாபாரம் செய்யும் நகரத்தாரும் கார், வண்டியில் வந்த நகரத்தார்களும் கூடி மேளதாள வகையருவோடு கிரிபிரகாரத்தில் வந்து இருக்கும் பத்தர்களையும் காவடிகளையும் வேலையும் எதிர்கொண்டு அழைத்து

வந்து, அன்னதான மடத்தில் விடுவர். அரண்மனை பொங்கலார் ஷ்டி மடத்தின் கீழ வாசல் வழியாக காவடிகளுடன் வருவர். பானகபூசை செய்து யாவரும் திருநீறு பெறுவர்.

இவ்வழிநடைப் பயணத்தில் நடக்கும் பத்தர்கள் பலன் பெறுதல் உறுதி.

# பாரதி காட்டும் விநாயகர்

**முன்னுரை :**

இந்திய மக்கள் கணபதியை வணங்கியே எக்காரியத்தையும், எத்தொழிலையும் தொடங்குவது ஒரு மரபு. இடையூறுகளைப் போக்கி இன்பத்தைச் சேர்க்கும் இறைவன் கணபதி என்பது நம்பிக்கை. ஆதலின் மங்கல காரியங்களில் ஈடுபடும்போது விநாயகரை முதற்கண் வழிபட்டுத் தொடங்குகிறோம். எழுதும்போது பிள்ளையார் சுழி இட்டே எழுதுகிறோம். தென்னகத்தின் முக்கிய தெய்வமான விக்கினேசுவரர் பற்றிய வரலாறு வேதத்திலோ, சங்க நூல்களிலோ காணப்பெறவில்லை. பல்லவர்கள் காலத்தில் நிகழ்ந்த சாளுக்கியப்போரில் வெற்றிவாகை சூடித் திரும்பிய 'பரஞ்சோதி' என்ற சைவப்பெரியார், தமக்கு வெற்றி கிட்டக் காரணமாக இருந்த பிள்ளையாரைச் சாளுக்கிய நாட்டிலிருந்து தமிழகத்திற்குக் கொணர்ந்தார் என்பது வரலாற்று ஆசிரியர்கள் கருத்து. தமிழ் இலக்கியங்களில் ஆறும் நூற்றாண்டிற்கு மேல் தான் கணபதி வணக்கம் காணப்படுகிறது. கச்சியப்பமுனிவர் இயற்றிய விநாயகர் புராணம் என்ற நூலில் விநாயகரின் விரிவான வரலாற்றை அறிகிறோம்.

வியாசர் எழுதிய பாரதத்தை விநாயகர் மேருவில் எழுதினார் என்றும், சிவபெருமான் கூறிய தந்திரங்களை ஏட்டில் எழுதினார் என்றும் கதைகள் வழங்குகின்றன.

சைவசமய உட்பிரிவுகளில் ஒன்றான காணபத்தியம் என்பது, கணபதியை மூலமுதற்கடவுளாகக் கொண்டு,

பரம்பொருளாக வழிபடும் இயக்கமாகும். இவருடைய வடிவம்-அமர்ந்த கோலம், நின்றகோலம், ஆடியகோலம், ஐந்து தலை உருவம், வல்லபையுடன் கூடிய உருஇப்படிப் பல வகையாகக் காணப்படுகின்றன. பெயர் வேறுபாடுகளும் பல உள. விநாயகர் உருவம் பர்மா, இந்தோசைனு, சப்பான் முதலிய நாட்டிலும் காணப்படுகிறது.

சதுர்த்தி, சட்டி, பிள்ளையார்நோன்பு ஆகியவை விநாயகரை வழிபடுவதற்குரிய மிகச் சிறப்பான நாட்களாகும்.

சுப்பிரமணிய பாரதியார் விநாயகரிடம் ஈடுபாடு கொண்டு "விநாயகர் நான்மணிமாலை" இயற்றினுர். பாரதியார் புதுவையில் வாழ்ந்தபோதுதான் அரிய காவியங்களையும் அன்புப் பெருக்கெடுக்கும் தோத்திரச் சாத்திரப் பாடல்களையும் யாத்தார். நான்மணிமாலை புதுவை நகரிலுள்ள மணக்குள விநாயகரைப் பற்றியதாகும்.

வைரம் முதலிய நான்கு அரிய மணிகளை நிரல்பட பொன்னிற் பொதிந்து அழகிய அணியை ஆக்குதல் போல, வெண்பா, கலித்துறை, விருத்தம், அகவல் ஆகிய நான்கு பாக்களால் அந்தாதித் தொடையாக முறையே நாற்பது பாடல்களால் இயற்றப் பெறுவதே 'நான்மணிமாலை'யாகும். ஆசிரியமும் வெண்பாவும் கலந்துவரும் மருட்பா பற்றிய செய்தி தொல்காப்பியத்தில் உண்டு. இதனை முன்மாதிரியாக வைத்துப் பின்வந்தவர்கள் பிறபாக்களையும் பாவினங்களையும் கலந்து "மாலை"களாக

ஆக்கினரே அல்லாமல் பிற மொழியினின்றும் அறிந்து செய்யவில்லை.

"விநாயகர் நான்மணிமாலையில்" - பாரதியாரின் சமயத் தத்துவங்கள், வேண்டுதல்கள், விநாயகரைப் பற்றிய பல செய்திகள் காணப்பெறுகின்றன. பாடச் சிதைவுற்று, பிறைக்குறிகள் இட்ட இடங்கள் தேசிக விநாயகம்பிள்ளை, சுத்தானந்த பாரதியார் ஆகியோரால் நிறைவு செய்யப்பெற்றுள்ளன. மேலும் பாட வேறுபாடுகள் பலவாகக் காணப் பெறுகின்றன.

இனி, இம்மாலையில் பாரதியார் குறிக்கின்ற பிள்ளையாரின் உரு, பெயர் வகைகள், தத்துவம், அதிற் காணம்பெறும் தனிப்போக்கு, இன்னோரன்ன பல செய்திகளைக் காண்போம்.

**உருவம் :**

விநாயகர் "ஓம்" என்ற வடிவத்தை உணர்த்துகின்ற உருவினர் என்ற கருத்தை வலியுறுத்துகிறார். மூலக்கடவுள் என்பதைத் "தத்துவமாகியதோர் பிரணவமே" என்று கூறுவர். கைத்தலங்களில் அங்குச பாசமும், கொம்பும் உடையவர் என்றும், கமலாசனம் இட்டு அமர்கிறவர் என்றும், மௌன நிலையில் வீற்றிருக்கிறார் என்றும் குறிக்கிறார். செயல்வாதி, ஆரவாரமின்றிக் காரியங்களை ஆற்றலோடு செய்வான் அன்றோ? விநாயகரும் மௌன வாயினராய் இருந்து மக்களைக் காக்கிறார் எனக் கவிஞர் விளம்புவர். விநாயகரின் பெயர்களாக - யானைமுகன், வாரணமுகன், கரிமுகன் என்பன சுட்டப்படும். மக்களின் அறிவும்

யானையின் பலமும் ஒருங்கே திகழும் உருவம் இது என்று கருதுவாரும் உளர். புதுவையில் பாடப்பட்டமையால் "புதுவை விநாயகனே" என்றும், அவ்விநாயகர் பெயரான 'மணக்குளக் கணபதியே' என்றும் விளிப்பர். மேலும் கணங்களுக்குத் (பூதங்களுக்கு) தேவன் ஆகையால் "கணபதி" என்றும், சிவனின் மூத்தபிள்ளை ஆகையால் "பிள்ளையார்" என்றும் யாவற்றிற்கும் மேலானவன் என்பதால் "விநாயகன்" என்றும் கூறுவர். "கற்பக விநாயகர்" என்ற சொல்லும் காணப்படுகிறது. இன்னும் கல்விக்கு இறைவன் என்ற கருத்தில் "வித்தைக்கு இறைவா" என்றும், அறிவை மணந்தவர் என்பதால் "வல்லபைகோன்" என்றும் அழைக்கிறார். விநாயகர் திருமாலின் கூறு என்ற கருத்தில் "வெள்ளாடை தரித்த விஷ்ணு" என்று நவில்கிறார்.

**கதைகள் :**

சிவபெருமான், சத்தி இவர்கட்கு முதல் மைந்தன் விநாயகன் என்பதும், கூன்பிறைக்குச் சிவன் புகல் தந்தமையும், தேவர்கள் உய்யச்சிவன் நஞ்சுண்டமையும், அனுமனைக் கொண்டு இராமன் இலங்கையை எரித்தமையும் பேசப் பெறுகின்றன.

விநாயகர் திருமாலின் மருகன் என்றும், உமையாளின் ஆசைமகன் என்றும் பன்முறையும் பகர்வார். விநாயகர் வேதத்தைப் படைத்தவர் என்றும் பாரதி கூறுகிறார்.

**தத்துவங்கள் :**

இறை, உயிர், உலகம் இம்மூன்றும் என்றும் இருப்பன. இவை என்றும் அழிதல் இல்லை. இதனை முப்பொருள் உண்மை எனச் சைவ சமய நூல்கள் பேசும். பாரதியார் இதனை மும்மணி மாலையிற் கூறுகிறார். பஞ்சபூதமாக இறைவன் விளங்குகிறார். உயிர், உடலோடு சேர்ந்து பொறி, புலன், உணர்வு பெற்று இறையருளால் களிப்பு எய்துகிறது என்று கூறும் சைவ சமயப் பேருண்மைகளைப் பாரதியார் கூறுகிறார். யான், எனது என்ற ஆணவத்தை அழித்து ஒழித்தவருக்கே இறையருள் முற்றும் கிட்டும் என்றும் நான் என்ற ஓர் தனிப்பொருள் இல்லை; நான் என்னும் எண்ணமே வெறும் பொய் என்றும் விளம்புவர். இதனை மாணிக்க வாசகர் "நானார் என் உள்ளமார் ஞானங்களார் என்னையார் அறிவார்" என்று தேம்புகிறார். இறைவன் விருப்பத்தின்படி உலகம் இயங்குகிறது என்றும், நாம் எப்பொறுப்பையும் ஏற்று நாமே செய்வதாக எண்ணி, கவலைப்படுதல் பிழை என்றும், இறைவன் உலகில் எல்லாமாய் விளங்குகிறார் என்றும் குறிப்பிடுகிறார்.

மலையில் பிறந்த அருவி ஆறாகப் பெருகிப் பல சிற்றோடைகளாகப் பிரிந்து, மீண்டும் பேராறாகி இறுதியில் கடலிலே சேர்வதுபோல, சமயங்களும் ஏதேனும் ஒரு தெய்வத்தைப் பெரிதாகப் பேசிக் கொண்டாடினாலும், முடிவில் எய்தும் பயன் ஒன்றே. இதனை உணர்ந்த பாரதியார் பல தெய்வங்களைப் பற்றியும் பாடி வணங்கியிருக்கிறார். கணபதியே சிவனாகவும், சக்தியாகவும், திருமாலாகவும், பிற

தெய்வங்களாகவும் விளங்குவதாக இயம்புகிறார். இளங்கோவடிகள், குமர குருபரர் ஆகியோரும் ஒரு கடவுளுக்குரிய உரு, குணம், பெயர் முதலியவற்றை வேறு கடவுளர்க்கும் ஏற்றிக் கூறுவர். பாரதியார், எல்லாத் தெய்வங்களையும் வணங்கினர் எனினும் அவர் நெஞ்சில் வைத்து என்றும் நேசித்துப் பூசித்த தெய்வம் பராசக்தியே! ஆதலின் விநாயகரைப் பாடும்போது பராசக்தியாகவும் யாவும் அவளின் செயல்களாகவும் புனைகிறார். மேலும் மக்களுக்குச் செய்யும் பணியில் சமயப்பணியும் அமையும் என்று கருதித் "தன்னைக் கட்டுதல், பிறர் துயர் தீர்த்தல், பிறர் நலம் வேண்டுதல், எளியவர்க்குக் கொடை, பசிப்பிணி நீக்குதல்" ஆகியன புரிக என்று குறிக்கிறார்.

**வேண்டுதல்கள் :**

உலகம் மாயை; உயிர் உடல் நிலையில்லை என்ற திரிபு உணர்வோடு பலர் திண்ணை வேதாந்தம் பேசுகின்றனர். பாரதியார், "பொய்யோ, மெய்யோ" என்ற தலைப்பில் இதனை நன்கு விளக்கி மறுக்கிறார். உலகமும் இங்கு நிலவும் பொருள்களும் இவற்றை நுகரும் உயிரும் என்றும் உண்டு என்றும், இவற்றை நெறியோடு துய்ப்பது சமயத்திற்கு ஒத்தது என்றும் கருதி, "கனக்கும் செல்வம், நூறு வயதும்" தர வேண்டுகிறார். மிகைபடாமல் நெறியோடு துய்க்கத் தன்னடக்கம் தேவை. ஆதலின், "தன்னைத் தாளுந்தன்மை நான் பெற்றிடில் எல்லாப் பயன்களும் தாமே எய்தும்" என்று பகர்கிறார். எளிய மக்கள் வேண்டுகிற புகழ், பேரழகு, அறிவு, மனத்தூய்மை, துயரின்மை ஆகியவை

பெருகவும் அச்சம், பழி, வினை இவை நீங்கவும் வேண்டுகிறார். இவர், தாம் வேண்டுவதைத் தொகுத்துக் கூறுமிடத்து "அன்பும் பொறையும் விளங்குக, துன்பமும் மிடிமையும், நோவும் சாவும் நீங்கி வாழ அருள்புரிக"! என வேண்டுகிறார். இவர் வேண்டுதலில் தனிப்போக்கு ஒன்றையும் காண்கிறோம். அதனை இவரே பேசுகிறார். "பேசாப் பொருளைப் பேச நான் துணிந்தேன். கேட்கா வரத்தைக் கேட்க நான் துணிந்தேன்" என்று தொடங்கித் தன்னுடைய பாட்டின் மூலம் எல்லா உயிர்களும் இன்புற்றிருக்க் வரமருள வேண்டுகிறார். இராமலிங்க சுவாமியும் இவ்வாறே வேண்டியமை கருதத்தக்கது.

மேலும் இந்தியா அந்நியர் ஆட்சியில் பிடியுண்டு அல்லலுற்றது கண்டு நொந்து அடிமை நீங்க "நாட்டினைத் துயரின்றி நன்கு அமைந்திடும்.......... நோக்கமாகக் கொண்டு நின்பதம் நோக்கினேன்" என்று விநாயகருக்கு விண்ணப்பித்து வேண்டுகிறார். இதனால் பாரதியார் தன்னைச் சமுதாயத்திற்கு ஒப்புக் கொடுத்த தொண்டனாக வாழ்ந்த அருமை அறியத்தகும். இதனை "நமக்குத் தொழில் கவிதை, நாட்டிற்கு உழைத்தல், இமைப்பொழுதும் சோராதிருத்தல்" என்ற அடியால் அறியலாம்.

**தனிப்போக்கு :**

சமயப் பெரியார்கள் இறைவனிடம் "இறவாமை வேண்டும்" என்றும் "உற்றாரை வேண்டேன், ஊர் வேண்டேன், பேர் வேண்டேன்" என்றும் "பாழ்த்த

பிறப்பறுத்திடுவான் யானுமுனைப் பரவுவனே" என்றும் வேண்டினர். இது பரிபக்குவம் மிக்க சீவன் முத்தர்களுக்கே ஒத்ததாகும். சாதாரண மக்கள் இவ்வாறு வேண்டுவதோ, விரும்புவதோ இல்லை. ஆனால் இவர்களும் உய்யவும், உயரவும் வேண்டுமெனின் இறைவன் பெயரைப் பல்கால் ஓதியும், தன்னடக்கத்தைப் கடைப்பிடித்தும், பொருள்களை நெறியோடு துய்த்தும் எல்லோரும் இன்புற்றிருக்கத் துணைபுரிந்து ஒழுகியும் நின்றால் இறைப்பதம் அடையலாம் என்ற கொள்கையைப் பாரதியார், விநாயகர் நான்மணிமாலையில் பலஇடங்களில் வலியுறுத்திப் போந்தார் பயிலும் மாணவனின் அறிவுக்கேற்பக் கற்றுத்தேர்ந்து முற்றிய அறிவினனாகிய ஆசான் தன் நிலையில் தாழ்ந்து, மாணவன் மனம் கொள்ளுமாறு கற்பிப்பது போலப் பாரதியார் வேதாந்த சித்தாந்தக் கருத்துக்களிலே தேர்ந்திருந்தும், சாதாரண மக்கள் நிலைக்கேற்றவாறு தம் வேண்டுதலையும் அமைத்திருப்பது உலகியலுக்கு மிகவும் ஏற்றதாகிக் கைக்கொள்ளுதற்கும் எளிமையாகிறது. பாரதியார் தன்னை மறந்த தொண்டனாகி நாட்டு விடுதலைக்கும் இறைவனை வேண்டும் போக்கு இவர்தம் தனியியல்பாம். உலகெலாம் இன்புற்றிருக்க "வெற்றி தருஞ்சுடர்" விநாயகன் தாளிணை வாழ்த்தி வணங்குகிறார். ஆதலின் பாரதியாரின் நால்வர் நான்மணிமாலை படித்துச் சுவைக்கவும், ஓதி உணரவும், ஒழுகி உயரவும் உதவும் ஞானப்பனுவல் என்பது தேற்றம்.

